[13th February 1959

THE HON. SRI M. MANICKAVELU : சாதாரணமாக ஜெனரல் வார்டில் ஏழைகள் அதிகமாக வருவதால் அவர்கள் அழுக்கான துணியை அணிந்துகொள்ளாமல் இருக்க ஆஸ்பத்திரியில் சுத்தமான துணி கொடுக்கப் படுகிறது. ஆகவேதான், இந்த விதியிருக்கிறது.

*Draining scheme for the Sattur Panchayat Board*

*320 *Q.*—SRI S. B ADITYAN (on behalf of Sri D. S. Authimoolam) கனம் ரெவினியூ அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) இராமநாதபுரம் ஜில்லா சாத்தூர் பஞ்சாயத்து போர்டு சாக்கடைக் கழிவு நீர் துப்புரவு விஷயமாக உதவித் தொகை கேட்டு சர்க்காருக்கு விண்ணப்பித்திருக்கிறதா ?

(ஆ) அதன் பேரில் எடுத்துக்கொண்டுள்ள நடவடிக்கைகள் என்ன?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes, Sir.

(*b*) The matter is under consideration.

SRI N. R THIAGARAJAN : முதலமைச்சர் அவர்களின் தொகுதி. யாக சாத்தூர், இருப்பதால் அதை அவர் சரியாகக் கவனிக்காமல் இருக்கிறார். ஆகவே, அங்கு கூடுதல் பணம் செலவு செய்யப்பட்டால் தனது தொகுதிக்கு செலவு செய்கிறார் என்று மக்கள் நினைத்துக்கொள்வார்களோ என்றிருந்தால் ரெவின்யூ அமைச்சராவது இந்த சாத்தூர் காரியத்தைக் கவனிப்பார்களா ?

MR. SPEAKER : நீங்கள் சொல்வதை முதலமைச்சர் அவர்கள் ஒத்துக்கொள்ள மாட்டார்கள் என்று நினைக்கிறேன்.

[*Note*.—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]

II.—ANNOUNCEMENT *RE* MESSAGE FROM THE GOVERNOR.

MR. SPEAKER : I have to anounce to the House that I have received the following reply from the Governor to the letter conveying the Motion of thanks passed by the Assembly :—

"I have received with great satisfaction your resolution of thanks for the address with which I opened the present session of the Legislature."

III.—GOVERNMENT BILL.

THE MADRAS GENERAL SALES TAX BILL, 1958 (L.A. BILL NO. 6 OF 1958)—*cont.*

MR. SPEAKER : We shall now resume consideration of the Bill clause by clause. We have finished 20 clauses so far. We shall now take up clause 21.

*Clause 21.*

MR. SPEAKER : The motion is—

'that clause 21 do stand part of the Bill.'

SRI M. KALYANASUNDARAM : Sir, I move—

"In sub-clause (1), *for* the words 'ten rupees', *substitute* the words 'six rupees'."

13th February 1959]

SRI V. K. KOTHANDARAMAN : I second the amendment.

SRI N. K. PALANISAMI : Sir, I move—

" *Omit* item (ii) under sub-clause (5)."

SRI V. K. KOTHANDARAMAN : I second the amendment.

SRI M. KALYANASUNDARAM : I do not want to make any speech.

MR. SPEAKER : Mr. Palanisami may follow his example. There is no objection.

SRI M. KALYANASUNDARAM : It is so obvious. I want the rate of registration to be reduced. There is no need to speak.

SRI N. K. PALANISAMI : சிறிய வியாபாரிகளுக்கு செக்யூரிட்டி கிடைக்காது. பெரிய வியாபாரிகளாக இருந்தால் அவர்களுக்கு சகல வசதிகளும் கிடைக்கும். ஆகவே, சாதாரண ஒரு வியாபாரி செக்யூரிட்டி கொடுக்க வேண்டுமென்று சொன்னால் அது அவ்வளவு நியாயமல்ல. "**The incidence of the tax is on the consumer and the consumer pays the tax**" என்று சர்க்கார் அடிக்கடி சொல்லியிருக்கிறார்கள். வியாபாரிகள் வரி கொடுக்க வேண்டியதில்லை, கன்சூமர்கள்தான் கொடுக்க வேண்டியிருக்கிறது. கன்சூமர் கொடுக்காமல் இருக்கும்போது, சிறிய வியாபாரிகளிடம் செக்யூரிட்டி கேட்பது நியாயமல்ல. ஆகவே எனது திருத்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

SRI S. LAZAR : 21வது பிரிவிலே உப பிரிவு 5(2)-யைப்பற்றி நான் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். அதில் இருக்கிற முறைப்படி வியாபாரிகள் செக்யூரிட்டி கொடுக்க வேண்டுமென்ற முறையில் அமைந்திருக்கிறது. இதை அரசாங்கத்தின் கவனத்திற்கு கொண்டு வருவதின் நோக்கம் என்னவென்றால், எந்த அளவு டீலருக்கு தொந்தரவு இல்லாமல் இருக்க முடியுமோ அந்த அளவு செய்ய வேண்டுமென்பதுதான் அரசாங்கத்தின் கருத்து என்று அமைச்சர் அவர்கள் சொல்லி இருப்பதினால்தான். இப்பொழுது இருக்கக் கூடிய பிரிவுகளை அப்படியே வைத்துப் பார்க்கும்போது, ஆறு கட்டங்களில் ஒருவனுக்கு வரி விதிக்க வேண்டுமென்று முடிவு செய்யும்போது, ஆறு தடவை அந்த டீலர் அப்பலெட் அத்தாரிட்டியிடம் போக வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. அதைப்பற்றி மட்டும் நான் அரசாங்கத்தின் கவனத்திற்கு கொண்டு வர விரும்புகிறேன். முதலாவதாக, அதாவது முதல் தடவை 12(1) பிரிவின் கீழ் கணக்குகள் கொடுக்கப்படுகிறபோது அது சரியான கணக்கு அல்ல என்ற நிலைமையில் அதிகாரி நினைப்பார்களேயானால் அந்தச் சமயத்தில் ஒரு விசாரணை நடத்தலாம். அப்பொழுது டீலர் அதிகாரியிடம் வரவேண்டியிருக்கிறது, அது முதல் தடவை. இரண்டாவது தடவை, 13-வது செக்ஷன்படி 1-வது பிரிவில், ப்ரொவிஷனல் அஸெஸ்மெண்ட் செய்யும்போது அப்படிக் கொடுக்கும் கணக்கு சரியாக இல்லையென்று சொல்லும்போது அதுபற்றி விசாரணை நடத்தலாம். அப்பொழுது ஒரு தடவை வியாபாரி அப்பலெட் அத்தாரிட்டியிடம் வர வேண்டியிருக்கிறது. அதற்கு அடுத்தபடியாக 13-வது செக்ஷன் மூன்றாவது உப பிரிவின்படி ப்ரொவிஷனல் அஸெஸ்மெண்ட் செய்யும்போது அதிகப்படியாகும்போது, அதிகப்படி ரேட் என்றோ அல்லது குறைந்த ரேட் என்றோ அமையும்போது மறுபடியும் அதுபற்றி 'ரீ ஓப்பன்' செய்ய அதிகாரிக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருப்பதால் அது பற்றி விசாரணை செய்யும்போது திரும்பவும் டீலர் வரவேண்டிய அவசியம் ஏற்படுகிறது. இது, 3-வது கட்டம். நான்காவதாக, வியாபாரி "எஸ்கேப்" ஆசாமியாக இருந்தால் 13(1) பிரிவின்படி மறுபடியும் வரவேண்டியதாக இருக்கிறது. ஐந்து வருட கால அளவிற்குள்ளாக ஒரு கணக்கு கொடுக்கப்பட்டு அதை திரும்பவும் பெறவேண்டுமென்ற முறையில் அதிகாரி முடிவு செய்கிறபோது அதைப் பற்றி விசாரணை நடக்கும்போது

நான்காவது முறை வரவேண்டியிருக்கிறது. அதற்கு அடுத்தபடியாக ஒவ்வொருவரும் ரெஜிஸ்ட்ரேஷன் செய்து கொள்ளவேண்டுமென்ற முறையில் 21-வது பிரிவில் அமைக்கப்பட்டிருக்கிறது. அதைதான் இப்பொழுது சொன்னேன். பின்னர், செக்யூரிட்டி கொடுக்க வேண்டுமென்று சொன்னால் இப்பொழுது ஒரு தடவை வரவேண்டியிருக்கிறது. ஆறுவது முறையாக, 45-வது பிரிவின் பிரகாரம் ப்ராசிக்யூஷன் எடுக்கப்பட்டால் ஒரு முறை வரவேண்டியிருக்கிறது. இப்படி ஆறு கட்டங்கள் இருக்கின்றன. இவைகள் சாதாரணமாக நடக்காது என்று இருந்தாலும் கூட, ஹைறப் பாத்தட்டிக்கல் கேஸாக வைத்துத்தான் இப்பிரச்னைகளைப் பார்க்க வேண்டும். ஒரு குறிப்பிட்ட இடத்திலுள்ள அதிகாரி ஒரு குறிப்பிட்ட டீலருக்கு தொந்தரவு கொடுக்க வேண்டுமென்றால் ஒரு வியாபாரியை ஆறு கட்டங்களில் வரும்படிச் செய்யலாம். ஒவ்வொரு தடவையும் உடனே முடிகிற காரியமல்ல. குறைந்தது நாலைந்து தவணைகள் கேட்பதாகயிருக்கும். அப்படிப் பார்க்கும்போது இந்த அதிகாரிகளிடத்தில் வருவது பற்றி கவனிப்பதற்கு ஒன்றிரண்டு ஆட்களைப் போட வேண்டி வரும். இல்லையென்றால் வியாபாரிக்கு அவனது நேரம் பூராவையும் இதற்குச் செலவாக்கும்படி நேரிடும். ஆகவே நான் சொல்வது என்னவென்றால் ப்ரொவிஷனல் அஸெஸ்மென்ட் என்று ஏற்கனவே 13-வது பிரிவில் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அஸெஸ்மென்ட் பின்னால் வருகிறது. ஆகவே ஒரு டீலரிடமிருந்து செக்யூரிட்டி வாங்கவேண்டியது அவசியமில்லையென்று குறிப்பிடத்தான் இதை எடுத்துச் சொன்னேன். 13-வது பிரிவின் கீழ் அஸெஸ்மென்ட் செய்த பிறகு மறுபடியும் செக்யூரிட்டி வாங்க வேண்டிய தேவையில்லை. ஆகவே, இது வியாபாரிகளுக்குத் தொந்தரவு கொடுக்குமாதலால் இதை எடுத்து விட வேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறேன். அடுத்தபடியாக செக்ஷன் 7-ல் "A dealer shall, until his registration is cancelled, be liable to pay the fees specified in sub-section (1) for every year..."

10-10 a.m. 20-வது பிரிவின் பிரகாரம் பார்க்கும்பொழுது, 7,500 ரூபாய்க்கு அதிகமாக வியாபாரம் செய்யும் ஒரு வியாபாரி கண்டிப்பாக ரிஜிஸ்டர் செய்துகொள்ள வேண்டும். அதே சமயத்தில் அவர் சர்டிபிகேட் தொடர்ந்து வாங்கவேண்டும் என்று 21-வது பிரிவிலே 2, 3 உப பிரிவிலே கண்டிருக்கிறது. அப்படிச் சொல்லியிருக்கும்பொழுது, இது மறுபடியும் "ரிபீட்" செய்வதாக அமைந்திருக்கிறது. ஆதலால் 7-வது உப பிரிவிலே—"எ டீலர் ஷல் பே எவ்வெரி ஈயர் தி பீஸ்" என்பது அவசியமில்லை. அதை எடுத்துவிடவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

**The Hon. Sri R. VENKATARAMAN** : கனம் சபாநாயகர் அவர்களே, ரூ. 10 என்று இருப்பதை 6 ரூபாயாகக் குறைக்கவேண்டுமென்ற திருத்தத்தை ஏற்றுக்கொள்ளுவதற்கு இல்லை. காரணம் என்னவென்று சொன்னால், சர்க்காருக்கு என்ன செலவாகிறதோ அந்தச் செலவை ஈடுபடுத்துவதற்காகத் தான் இந்த பீஸ் விதிக்கப்படுகிறது. இது வரி அல்ல. இம்மாதிரி ரிஜிஸ்ட்ரேஷன் செய்வதற்கு உத்தியோகஸ்தர்களை வைத்து, ஆபீஸ் வைத்து நடத்தவேண்டியிருக்கிறது. அதற்கு என்ன செலவு ஆகிறதோ அதைக் கணக்குப் போட்டு, வருஷத்திற்கு 10 ரூபாய் என்று நிர்ணயம் செய்திருக்கிறோம். வருஷத்திற்கு 10 ரூபாய் என்று சொன்னால், மாதத்திற்கு ஒரு ரூபாய்க்கும் குறைவாக இருக்கிறது. ஒரு வியாபாரி ரிஜிஸ்டர் செய்துகொள்ளுவதற்கு ஒரு மாதத்திறகு ஒரு ரூபாய்க்கும் குறைவாக பீஸ் கொடுக்கும்படி வைக்கவேண்டுமென்று சொன்னால், அதனால் சர்க்காருக்கு நஷ்டம் விளையும். அதனால் இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்ளுவதற்கு இல்லை.

இரண்டாவதாக "செக்யூரிடி" கொடுக்கவேண்டுமென்று இருப்பதை எடுத்து விட வேண்டுமென்று ஸ்ரீ என். கே. பழனிசுவாமி அவர்களும், ஸ்ரீ லாஸர் அவர்களும் சொன்னார்கள். நான் ஒரு சிறு உதாரணம் சொன்னால் இருக்கக்கூடிய நிலைமை நன்றாக விளங்கும். பங்களூரிலிருந்து ஒருவர் 100 பட்டுச் சேலையைத் தலையில் வைத்துக் கட்டிக் கொண்டு கோயம்புத்

13th February 1959] [Sri R. Venkataraman]

தூரில் வந்து விற்றால், அவர் ரூ. 6,000, 7,000-க்கு மேற்பட்ட வியாபாரத்திற்கு எந்த விதமான வரியும் கட்டாமல் போய் விடுவார். இம்மாதிரி தினம், தினம், வார வாரம் செய்துகொண்டே போகலாம். அதனால் தான் "காஷுவல் டீலர், டிரேடர்" முதற்கொண்டு ரிஜிஸ்டர் செய்து கொள்ளவேண்டுமென்பதற்காகத்தான் இந்தத் திட்டம் போட்டிருக்கிறோம். அம்மாதிரி "காஷுவல் டிரேடர்" இங்கு வந்து விற்பனை செய்துவிட்டுப் போனால் அவர்களிடம் வரி வசூல் செய்வதற்கு இந்த விதி போடப்பட்டிருக்கிறது. இந்த ராஜ்யத்தில் இல்லாத வெளி ராஜ்யத்திலிருந்து வரக்கூடிய வர்த்தகர்களுக்கோ அல்லது இங்கு இருக்கும் அவர்களது ஏஜண்டுகளுக்கோ வரி விதிப்பதற்காகத்தான் இம்மாதிரி விதி போடப்பட்டிருக்கிறது.

அடுத்தபடியாக ஸ்ரீ லாஸர் அவர்கள் ரிஜிஸ்டரேஷன் கான்ஸலேஷன் செய்வதற்கு முந்திய இரண்டு வருஷங்களுக்கும் தொடர்ந்து ரிஜிஸ்டிரேஷன் பீஸ் கொடுக்கவேண்டுமென்று இருப்பதை எடுத்துவிடவேண்டுமென்று சொன்னார்கள். இந்த விதி இல்லாவிட்டால் ரிஜிஸ்டர்டு டீலர் தன்னுடைய பெயரை லிஸ்டிலிருந்து எடுத்துக்கொள்ளுவதற்கு முயற்சி செய்ய மாட்டார். ஒரு தரம் ரிஜிஸ்டர் செய்துவிட்டால், அம்மாதிரி அவர் ரிஜிஸ்டர் செய்துகொள்ளுவதற்கு அவருக்கு அருகதை இல்லை என்று நிரூபிக்கக்கூடிய பொறுப்பு ரிஜிஸ்டர்டு டீலருக்கு இருக்கிறது. அப்படி அந்தப் பொறுப்பு அவர்களுக்கு இல்லாவிட்டால் ஒரு தரம் ரிஜிஸ்டர் செய்துவிட்டு, எப்பொழுது லைசென்ஸ் பீஸ் கேட்டாலும், "எனக்கு 7,500 ரூபாய்க்கு குறைவாகத்தான் விற்பனை ஆகிறது, நான் அந்த விதிக்கு உள்படவில்லை" என்று பதில் சொல்லிக்கொண்டே இருக்கலாம். ஆகவே, வியாபாரம் குறைவாக இருக்கிறது, ரிஜிஸ்டிரேஷனை கான்ஸல் செய்துவிட வேண்டுமென்று சொல்லி அதை நிரூபிக்கவேண்டிய பொறுப்பு அவர்கள் கையில் விடப்படவேண்டுமென்பதற்காகத்தான் இந்த ஷரத்தை இம்மாதிரி அமைத்திருக்கிறோம். ஆகவே, இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்ளுவதற்கு இல்லை.

SRI S. LAZAR : நான் 7-வது உப பிரிவில் இருக்கக்கூடிய முதல் பகுதி அவசியம் இல்லை என்று சொன்னேன். ஏனென்றால் 21-வது பிரிவின் (1), (2)-வது உப பிரிவிலேயே இது தானாகவே வந்துவிடுகிறது. அந்த இடத்திலே இதை மறுபடியும் சொல்லவேண்டியதில்லை என்று சொன்னேன்.

பிறகு அமைச்சர் அவர்கள் செக்யூரிடி வாங்குவது பற்றி சொல்லும் பொழுது "காஷுவல் டீலர் அல்லது அவர்களுடைய ஏஜண்டுகளிடம்தான் இந்த செக்யூரிடி வாங்கும் முறையில் இது அமையும் என்று சொன்னார். எல்லா வியாபாரிகளுக்கும் இது பொருந்தாது" என்று சொன்னால், அப்பேர்ப்பட்டவர்களை மட்டும் விலக்கி காஷுவல் டிரேடர், வெளி ஏஜண்டுகளுக்கு மட்டும் இது பொருந்தும் என்று இதை மாற்றிவிட்டால், அமைச்சர் அவர்கள் அனுகுகின்ற முறைப்படி இது அமையும் என்ற காரணத்தினால் இதை அப்படியாவது திருத்த முடியுமா என்று நான் கேட்க விரும்புகிறேன்.

* THE HON. SRI R. VENKATARAMAN : I wish the hon. Member reads the language of the section. It merely says the prescribed authority shall have the power. It does not mean he will levy the security from everybody. He will exercise his discretion and that is subject to revision. Therefore, it is not necessary to change it.

In the instance given by my hon. Friend, I think he has taken an extreme case, of a man who is giving deliberately false accounts all along, it is only there he will have to go to the authority six

times and I think it is necessary for him to go to the authorities six times if he goes on violating every one of the rules conected with the sales tax.

The amendments were put and lost.

Clause 21 was put and carried.

## *Clause 22.*

MR. SPEAKER : The motion is—

"That clause 22 do stand part of the Bill."

SRI S. LAZAR : இந்தப் பிரிவின் முதல் உப பிரிவிலே—

"No persons who is not a register dealer shall collect any amount by way of tax.." என்ற முறையில் இருக்கிறது. அதாவது ரிஜிஸ்டர் செய்துகொண்டவர்கள் மட்டும்தான் இந்த வரியை வசூலிக்க வேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. 2-வது உப பிரிவிலே—"If any dealer or person who is not liable to tax under this Act collects any amount purporting to be by way of tax.." என்று இருக்கிற காரணத்திஞல் அது சரியாக இல்லை என்று நினைக்கிறேன். ஒருவேளை இந்தப் பிரிவை கொண்டுவந்திருக்கக்கூடிய நோக்கம் "who is not a registered dealer என்று நினைக்கிறேன்.

If any person who is not a registered dealer collects any amount purporting to be by way of tax, such dealer or person shall pay over to the Government "

என்று அமையவேண்டுமென்று நினைக்கிறேன். ஆகவே,

"If any dealer or person who is not a registered dealer"

என்று இதை மாற்றி அமைக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, 3-வது உப பிரிவிலே—

"If any dealer or person collects tax on transactions not liable to tax under this Act.."

என்று கண்டிருக்கிறது. உபரியாக வசூல் செய்த பணத்தை அரசாங்கத்திற்கு செலுத்த வேண்டுமென்று இதில் அமைந்திருக்கிறது. இப்படி உபரியாக ஒரு சில வியாபாரிகள் வசூல் செய்யும்பொழுது ஒன்றுமே தெரியாத சாதாரண பாமரமக்கள் அந்த வரியை கொடுத்திவிடுவார்களேயாஞல் அதற்கு என்ன விமோசனம் இருக்கிறது என்று தெரியவில்லை. அப்படி வசூல் செய்கிறவர்கள்பேரில் நடவடிக்கை எடுக்கப்படும் என்ற முறையில் அமைந்திருந்தால், குற்றம் என்ற முறையில் 45-வது பிரிவில் அமைந்திருந்தால், அது போன்ற முறையில் வரி வாங்கக்கூடாத எந்தப் பொருள்களுக்கும் வியாபாரிகள் வரி வாங்காமல் இருப்பதற்கு முயற்சி செய்வார்கள். 22 (1)-வது பிரிவின்படி ரிஜிஸ்டர் செய்து கொள்ளாத வியாபாரி வரி வசூல் செய்தால் அவர் தண்டனைக்குள்ளாவார் என்று அமைந்திருக்கிறது. அதேமாதிரி (2), (3)-வது உப பிரிவின் கீழே வரி வாங்கக்கூடாத பொருள்களுக்கு வரி வாங்கிஞல் அதுவும் தவறு என்ற முறையில் 45-வது பிரிவிலே அமையவில்லை. அரசாங்கத்திற்கு வருமானம் வரவேண்டுமென்ற முறையில் வாங்கக்கூடிய பணம் வந்து சேரவேண்டுமென்றும் இது அமைந்திருக்கிறதே தவிர, இம்மாதிரி வரி வாங்காமல் தடுப்பதற்கு ஒரு பரிகாரமும் இல்லை. இதை கவனிக்க வேண்டுமென்று அரசாங்கத்தாரைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

THE HON. SRI R VENKATARAMAN : செக்ஷன் 22 பிரகாரம் ரிஜிஸ்டர்டு டீலர் என்ன வரி உண்டோ அதற்கு மேல் கலெக்ட் செய்யக் கூடாது என்று கண்டிருக்கிறது. செக்ஷனில் 22 (2)-ல் டீலராக இருந்தாலும் சரி, டீலராக இல்லாத சாதாரண மனிதராக இருந்தாலும் சரி, விதிக்கப்

13th February 1959] [Sri R. Venkataraman]

படாத வரியை வசூலித்தால், சட்டப்படி அனுமதிக்கப்படாத வரியை வசூலித்தால், அதை சர்க்காருக்கு கட்டிவிடவேண்டுமென்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்த இரண்டாவது உப பிரிவுக்கும் முதல் உப பிரிவுக்கும் உள்ள வித்தியாசம் இதுதான். யாராக இருந்தாலும் சரி, டீலராக இருந்தாலும் சரி, தனிப்பட்ட நபராக இருந்தாலும் சரி, யாரிடமாவது விற்பனை வரி என்று சொல்லி வசூலிக்க வேண்டாத தொகையை வசூலித்துவிட்டால் அவர் அந்தத் தொகையை சர்க்காரில் கட்டிவிடவேண்டும். ஸ்ரீ லாஸர் அவர்கள் இதைச் குற்றம் என்று செய்யவில்லை என்று சொன்னார்கள். குற்றம் என்று செய்வதற்கு அவசியமில்லை. இந்த விதமாக விதிக்கக்கூடாத வரியை யாராவது வசூலித்தால், அதைச் சர்க்கார் எடுத்துக்கொண்டுவிடும் ; அதைச் சர்க்காருக்கு கட்டிவிடவேண்டுமென்று சொன்னால், யாரும் இம்மாதிரி வரி வாங்கமாட்டார்கள். அப்படி வாங்குவதில் அவர்களுக்கு எந்த விதமான லாபமும் இல்லை. ஏதாவது லாபம் இருந்தால்தான் அப்படி வாங்குவார்கள். ஆனால், வேண்டுமென்று செய்தால் அது குற்றமாகிவிடும். 45-வது பிரிவில 'wilfully acts in contravention of the provisions of this Act' என்று இருப்பதால் அது குற்றமாகிவிடும். ஆகவே, இந்த ஷரத்து சரியாக இருக்கிறது. இதை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

The clause was put and carried. 10-20 a.m.

Clause 23 was put and carried.

*Clause 24.*

MR. SPEAKER : The motion is—

"That clause 24 do stand part of the Bill."

SRI N. K. PALANISAMI : Sir, I move the following amendment—

"In sub-clause (1), *for* the words 'tweny-one days' *substitute* the words 'thirty days'."

The amendment was duly seconded.

SRI S. M. ANNAMALAI : Sir, I move the following amendment—

"In sub-clause (1), *for* the word 'twenty-one', *substitute* the word 'forty'."

SRI A. GOVINDASAMY : Sir, I second it.

SRI N. K. PALANISAMI : Sir, I move the following amendment—

"In item (*b*) under sub-clause (2), *after* the words 'imposed by him', *add* the words 'after issue of summons to the dealer'."

The amendment was duly seconded.

SRI N. K. PALANISAMI : Sir, I move the following amendment—

"*Omit* sub-clause (3)."

The amendment was duly seconded.

MR. SPEAKER : The clause and the amendments are before the House for discussion.

SRI N. K. PALANISAMI : கனம் சபாநாயகர் அவர்களே, இதில் இப்போது கொடுத்திருக்கும் நாட்கள் போதாது. ஆகவே இதில் 30 நாட்கள் என்றுவது இருக்க வேண்டுமென்று திருத்தம் கொடுத்திருக்கிறேன். ஏனென்றால் இதில் சொல்லப்பட்டிருக்கும் 21 நாட்கள் என்பது மிகவும் குறைவானது. ஆகவே இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக சப்-கிளாஸ் பி-யில் சொல்லப்பட்டிருப்பதின் பிரகாரம் சம்மன் இல்லாமல் வியாபாரிகளை கைது செய்வதற்கும் முடியும் என்ற அளவில் அமைந்திருக்கிறது.

"on application to any Magistrate, by such Magistrate as if it were a fine imposed by him" என்று இருக்கிறது. இதற்குப் பின்னால் "after issue of summons to the dealer" என்று இருக்கவேண்டும் என்று திருத்தம் கொடுத்திருக்கிறேன். அதாவது சாதாரணமாக எவ்வளவு வரி கொடுக்க வேண்டுமென்று அதிகாரி மாஜிஸ்ரேட்டிடம் போய் சொன்னால் அதன்படி உடனே சம்மன் பிறப்பிக்க முடியும். இவ்விதமில்லாமல் அதிகாரி போய் சொன்னாலும் அதைப்பற்றி விசாரணை செய்து அதன் பின்னால் நடவடிக்கை எடுக்கவேண்டும் என்றுதான் நான் திருத்தம் கொடுத்திருக்கிறேன். அடுத்தபடியாக 3-வது சப் கிளாஸில் penalty என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதன்படி வரி கட்டத் தவறினால் முதல் மூன்று மாதத்திற்கு அரை சதமானம் வட்டியும், அதற்கு அடுத்த மூன்று மாதத்திற்கு ஒரு சதமானம் வட்டியும் கொடுக்க வேண்டியிருக்கிறது. இது வட்டி என்ற முறையில்தான் கொடுக்க வேண்டியிருக்கிறது. இவ்விதம் சர்க்காருக்கு வட்டி கொடுக்கவேண்டிய அவசியமில்லை என்று கருதுவதால் இந்த சப்-கிளாஸை நீக்கிவிட வேண்டும் என்று திருத்தம் கொடுத்திருக்கிறேன். இந்தத் திருத்தங்களை அமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

* SRI S. M. ANNAMALAI : கனம் சபாநாயகர் அவர்களே, நான் கொடுத்திருக்கக்கூடிய திருத்தம், வியாபாரிகள் வரி கொடுக்கத் தவறுவார்களானால், அவர்களிடமிருந்து வரி வசூலிப்பதற்கு 21 நாள் கொடுக்க வேண்டும் என்று இருக்கிறது. இதன் பிரகாரம் வியாபாரி ஏதாவது தன்னுடைய வியாபாரத்தால் நஷ்டமானவர்கள் வரி கொடுக்க முடியாமல் இருக்கின்றவர்கள் 22-வது நாள் கொடுக்கவேண்டும் என்று கூட அதிகாரி உத்தரவிடலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. மற்ற சட்டங்களில் எல்லாம் 40 நாட்கள், 30 நாட்கள் என்று குறிப்பிட்டிருக்கிறது. ஆகவே இதில் 21 நாட்கள் என்றிருப்பது பொருத்தமல்ல. இதன் மூலம் 22-வது நாள் வரி கொடுக்கவில்லையானால் அவர்களின் சொத்தின்பேரில்கூட ஜப்தி செய்து கொண்டு போகலாம் என்று இருக்கிறது. இதில் குறைந்தது இரண்டு மாதங்கள்வரை கூட காலம் கொடுக்கலாம். அதிலும் குறிப்பாக நஷ்டமடைந்த வியாபாரிகள் 22-வது நாளே வரிகளை கொடுக்க வேண்டியிருப்பதால், அவர்கள்பேரில் சலுகை காட்டுகின்ற முறையிலாவது இதில் 21 நாட்கள் என்றிருப்பதை 40 நாட்கள் என்று திருத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதற்காக நான் கொடுத்திருக்கும் திருத்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, 24-வது செக்ஷனில் முதலில் 21 நாட்களுக்குள்ளாக வசூலிக்கக் கூடாது என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதைப்பற்றி முதலிலே நம்முடைய மசோதாவில் 15 நாட்கள் என்று சொல்லப்பட்டிருந்தது. அதன் பின்னால் இதைப்பற்றி பரிசீலனை செய்த பரிசீலனை கமிட்டியார் இது மிக குறைவாக இருக்கிறது, இதை அதிகப்படுத்தவேண்டும் என்று கருதி இதை 21 நாட்கள் என்று உயர்த்தினார்கள். இதில் இப்போது இருக்கும் 21 நாட்கள் எனறு இருப்பதை 40 நாட்கள் என்று உயர்த்தினால் வரி கொடுக்க வேண்டியவர்கள் ஊரை விட்டே போகக்கூடிய நிலைமை ஏற்பட

13th February 1959] [Sri R. Venkataraman]

லாம், அதன் காரணமாக சர்க்காருக்கு வரியை வசூலிக்க முடியாத நிலைமை ஏற்படலாம். ஆகவே இதில் 21 நாட்கள் என்று போட்டிருப்பதில் தவறு ஒன்றுமில்லை என்று நினைக்கிறேன். இதனால் சர்க்காரை ஏமாற்றுகிறவர்களுக்கு வழி கிடைக்காது என்றும் கருதிதான் இது இவ்விதம் போடப்பட்டிருக்கிறது. அடுத்தபடியாக சட்டத்திற்கும் நிர்வாகத்திற்கும் இருக்கின்ற வித்தியாசங்களை நாம் நன்றாகப் புரிந்து கொள்ள வேண்டும். நிர்வாகத்தில் பல தவறுகள் நடக்கின்றது என்பதற்காக சட்டங்களையும் தவறான முறையில் ஏற்படுத்த முடியாது. சட்டத்தில் ஏதாவது பரிகாரம் காணவேண்டுமென்றால் அப்பீல், அதற்கு மேல் ரிவிஷன் என்றெல்லாம் பல வழிகள் இருக்கின்றன. கடந்த இரண்டு வருஷ காலத்தில் நடந்திருப்பவைகளை எடுத்துக்கொண்டுப் பார்த்தால் வரி கொடுக்க முடியாதவர்கள் எல்லாம் மேல் அதிகாரிகளிடத்தில் போய் முறையிட்டு வரிகளைத் தவணை முறைகளாக (இன்ஸ்டால்மென்ட்) கட்டுவதற்கும், கட்டவேண்டிய தவணை காலத்தை நீட்டிகொடுக்கவேண்டும் என்று கேட்டும் பல உத்தரவுகளைப் பெற்றிருக்கிறார்கள். இவ்விதம் கேட்கப்படுபவைகள் எல்லாம் நியாயமாக இருந்தால் அவைகள் அனுமதிக்கப்படும். ஆகவே இதற்காக சட்டத்தில் மாறுதல் செய்ய முடியாது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். அடுத்தபடியாக கனம் பழனிசாமி அவர்கள் சொன்னார்கள், நோட்டீஸ் கொடுத்ததின் பின்னால் தான் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று சொன்னார்கள். எப்போதுமே மாஜிஸ்ட்ரேட்டிடம் சென்று சொல்லும்போது அவர்கள் நோட்டீஸ் கொடுக்காமல் நடவடிக்கை ஒன்றும் எடுப்பதில்லை. இவைகள் எல்லாம் (ப்ரொஸீசர்) வழக்கமான நடவடிக்கைகளாக இருந்து வருகின்ற விஷயம். இவைகளையெல்லாம் சட்டத்தில் சேர்க்கவேண்டுமென்று சொன்னால் இந்தச் சட்டம் 600-க்கு மேற்பட்ட செக்ஷன்கள் உள்ளதாக ஆகிவிடும். எப்போதுமே கோர்ட்டில் ஒரு கேஸை கொடுத்து விட்டால் ஒன்றும் விசாரிக்காமல் உடனே தூக்கில் போட்டுவிடமாட்டார்கள். இன்றைக்குப் போடப்பட்டிருக்கும் ப்ரொவிஸோ-வைப்பார்த்தால் பரிசிலனை செய்து தான் இந்த உத்தரவை போடவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே நோட்டீஸ் கொடுக்காமல் நடவடிக்கை எடுத்து விடுவார்கள் என்று நாம் கருத வேண்டிய தேவையில்லை என்பதை சொல்லிக்கொள்கிறேன். அடுத்தபடியாக இதில் Penalty என்று போடப்பட்டிருப்பது பொருத்தமில்லை என்றுதான் நான் கருதுகிறேன். அதோடு இதில் சொல்லப்பட்டிருப்பது முதல் மூன்று மாதத்திற்கு அரை சத விகிதமும், அதன் பின்னால் ஆறு மாதத்திற்கு ஒரு சத விகிதமும் போடப்பட்டிருக்கிறது. இதுகூட போடவில்லையென்றால் வரி வசூலிப்பதில் பெரிய காலதாமதம் ஆகும். ஆகவே இதை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

The amendments were put and lost.

Clause 24 was put and carried.

Clause 25 was put and carried.

Clause 26 was put and carried.

*Clause* 27.

MR. SPEAKER : The motion is—

" That clause 27 do stand part of the Bill."

SRI N. K. PALANISAMI : Sir, I move the folowing amendment— 10-30 a.m.

" In the proviso, *after* the words ' by transfer ', *add* the words ' and with knowledge of the liability of transferor '."

The amendment was duly seconded.

MR. SPEAKER : The clause and the amendment are before the House for discussion.

**Sri N. K. PALANISAMI :** ஒரு வரி விதிக்கும் ஆபீசர் பிராசிக்யூஷன் நடத்தக்கூடிய காலத்தில் விற்கிறவனை ஒன்றும்செய்யாமல் அந்தக் கடையை வாங்குகிறவனிடத்திலிருந்து வரி வசூலிக்க ஏற்பாடு செய்திருப்பது சரியல்ல. விற்கிறவன் வாங்குகிறவனிடம் எவ்வளவு பாக்கி டாக்ஸ் இருக்கிறதென்று முதலில் சொல்லாவிட்டால் இந்தத் தொகையை வாங்குகிறவன் கொடுக்கும்படியாக நேரிடும். உண்மையாகவே தெரிந்து வாங்கினால் பாக்கி வரியை இவனிடம் வசூலிப்பது நியாயம். அப்படி ஒன்றும் தெரியாது செய்கிறவர்களை—ஒன்றும் அறியாதவர்களை இது பாதிக்காமல் இருக்க என் திருத்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

**The Hon. Sri R. VENKATARAMAN :** ஒருவனிடமிருந்து ஒன்றை வாங்கும்போது யாரும் அசெட் அண்டு லையபிலிடி தெரிந்து கொள்ளாமல் வாங்கமாட்டார்கள். அப்படி வாங்கினால் பல நஷ்டத்திற்கு உள்ளாக நேரிடும். நமது பழனிசாமி அவர்களுக்கு வர்த்தக அனுபவம் கிடையாது. யாரோ லையபிலிடி அசெட் தெரியாமல் வாங்கி விடுவார்கள் போலும். அவர்களுக்கு நஷ்டம் உண்டாகுமே என்று பேசுகின்றார். அப்படி யாரும் வாங்கமாட்டார்கள். ஆகவே இந்தத் திருத்தத்திற்கு அவசியம் இல்லை.

The amendment was put and lost.

Clause 27 was put and carried.

Clause 28 was put and carried.

*Clause* 29.

**Mr. SPEAKER :** The motion is—

"That clause 29 do stand part of the Bill."

**The Hon. Sri R. VENKATARAMAN :** Mr. Speaker, Sir, I move a few verbal amendments—

In sub-clause (1), for the words "Madras City Land revenue" *substitute* the words "Madras City Land Revenue."

In sub-clause (2), for the words "be vested with" *substitute* the word "have."

In sub-clause (3), for the words "vested under" *substitute* the words "conferred by".

The amendments were put and carried.

Clause 29 as amended was put and carried.

*Clause* 30.

**Mr. SPEAKER :** The motion is—

"That Clause 30 do stand part of the Bill".

**Sri N. K. PALANISAMI :** Sir, I move—

In sub-clause (2), for the words "by the Government", *substitute* the words "by the High Court".

In the explanation to item (iv) of sub-clause (3) after the words "any other member", add the words "except the departmental member".

13th February 1959] [Sri N. K. Palanisami]

In sub-clause (4), *omit* the words " with the previous sanction of the Government ".

The amendments were duly seconded.

SRI S. LAZAR : Sir, I move—

" *Omit* sub-clause (4).

MR. SPEAKER : Who is seconding the amendment?

SRI B. K. LINGA GOWDER : I am seconding it, Sir.

MR. SPEAKER : Next, time, I won't remind the hon. member for getting his amendment seconded. I will say that the amendment falls through for want of a seconder.

The clause and the amendments are before the House for discussion.

SRI N. K. PALANISAMI : முதலாவதாக வேகன்ஸி ஏற்பட்டால் அதை சர்க்காரே பூர்த்தி செய்யும் என்று சொல்லியிருப்பது சரியல்ல. என்னதான் சர்க்காரே நேர்மையாகச் செய்வதாக இருந்தாலும் வியாபாரிகள் மனதை திருப்தி செய்யமுடியாது. ஆகவே இதற்கு " ஹைக்கோர்ட்டிலேயே " நியமிக்கப்பட வேண்டுமென்பது என் திருத்தம்.

அடுத்தபடியாக மூன்று ஜெட்ஜுகள் இருக்கும்போது இரண்டு பேர் சேர்ந்து கொடுக்கிற முடிவை முடிவாக ஏற்படுத்தியிருக்கிறார்கள். இலாகாவைச் சேர்ந்தவர்கள் ஜட்ஜாக வந்து விட்டால் இந்த முடிவு நியாயமாக இருந்தாலும் அவ்வளவு திருப்திகரமாக இருக்காது. ஆகவே " டிபார்ட்மெண்டல் மெம்பரைத் தவிர " என்று நான் கொடுத்திருக்கக்கூடிய திருத்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக அபேலட் டிரிப்யூனல் என்பது தனித்து இயங்கக் கூடிய ஸ்தாபனம். அடானமஸ் பாடி. அவர்களுக்கே கட்டுப்பாடு விதிக்கக்கூடிய அளவு சர்க்கார் எந்தக் காரியத்தையும் செய்யக்கூடாது. சர்க்காரிடமிருந்து முன்பாக சாங்ஷன் வாங்கித்தான் நோட்டிபிகேஷன், ப்ரோஸிஜரை ரெகுலேட் பண்ணலாம் என்பதாக வைத்திருப்பது அவ்வளவு பொருத்தமாக இல்லை. கோர்ட் எப்படி இயங்குகிறதோ அப்படி இயங்க வேண்டும். ஆகவே " சர்க்காருடைய முன் அனுமதியின்பேரில் " என்று விதிக்கப்பட்டிருப்பதை எடுத்துவிட வேண்டுமென்று வற்புறுத்துகிறேன். இந்தத் திருத்தங்களை எல்லாம் சர்க்கார் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றும் கேட்டுக் கொள்கிறேன்.

SRI S. LAZAR : இந்தப் பிரிவைப் பற்றி பேச முற்படுகிறபோது கனம் பழனிசாமி வற்புறுத்திய முக்கியமான கருத்தை நானும் வற்புறுத்த விரும்புகிறேன். மூன்று நபர்கள் இருக்கிறபோது அதற்குத் தலைமை அதிகாரி ஜுடீஷியல் அதிகாரியாக இருக்கவேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதே முறையில் இரண்டு நபர்கள் இருக்கிறபோதும்கூட அதற்குத் தலைமை வகிக்கக் கூடியவர் சட்டம் தெரிந்தவராக நீதி பரிபாலனத்தைச் சேர்ந்தவராக இருக்கவேண்டும் என்கிற கருத்தை நானும் மிகவும் வலியுறுத்திச்சொல்ல ஆசைப்படுகிறேன். ஏனென்று கேட்டால் அபேலட் டிரிப்யூனல் என்று வைக்கிறபோது மூன்று மெம்பராகவோ, இரண்டு மெம்பராகவோ இருக்கிற காரணம் பூர்த்தியாக வேண்டுமானால் இரண்டு மெம்பரில் ஒரு மெம்பராவது சட்டம் தெரிந்தவராக அனுபவம் உள்ளவராக இருந்தால்தான் எந்த நோக்கத்தோடு அப்பலேட் டிரிப்யூனலுக்குப் போகிறார்களோ அந்த நோக்கம் நிறைவேறும். ஆகவே அந்தக் கருத்தை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக நான் கொடுத்திருக்கக் கூடிய திருத்தத்தைப் பற்றி பேசுகின்றபோது 4-வது பிரிவு பராவின் பிரகாரம் ஒரு அதிகாரத்தை அபலேட் டிரிப்யூனலுக்குக் கொடுக்கிறோம். சாதாரணமாக இந்தச் சபை தன் அதிகாரத்தை டெலிகேட் பண்ணுவது அரசாங்கத்திற்குத்தான். இதன்பேரில் அரசாங்கம் செய்கிற ரூல்ஸ், ரெகுலேஷன் எல்லாம் சபையின் பார்வைக்கு வருகிறது. அதற்கான ஏற்பாட்டையும் செய்துகொண்டிருக் கிறோம். ஆனால் இந்த உப பிரிவின் அடிப்படையில் பார்க்கிறபோது அந்த ஓர் அதிகாரத்தை அபலேட் டிரிப்யூனலுக்குக் கொடுக்கிறபோது அவர்கள் செய்கிற காரியம் இந்தச் சபையின் கருத்துக்கு உட்பட்டு இருக்குமா என்ப பதையெல்லாம் கவனிக்க வழியில்லாமல் போய்விடும். இந்த ஓர் அதி காரத்தை அரசாங்கமே வைத்துக் கொண்டால் நடைமுறையில் இந்தச் சபையின் கௌரவத்திற்கு எந்த விதமான இழுக்கும் இல்லாத முறையில் நம் கௌரவம் காப்பாற்றப்படும். ஆகவே இந்த ஷரத்தையே எடுத்துவிட வேண்டுமென்பது என் திருத்தம். அப்படி அரசாங்கம் இது சம்பந்த மாக விதிகளைச் செய்கிறபோது அதையே அபலேட் டிரிப்யூனலுக்குக் கொடுத்து அரசாங்கமே வெளியிடலாம் என்ற காரணத்தினாலேயே இதை எடுத்துவிடவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN: முதலாவதாக இந்த அபலேட் டிரிப்யூனலுக்கு ஏதாவது வேகன்ஸி வந்தால் அதை ஹைகோர்ட்டே பில்லப் பண்ணவேண்டுமென்று கனம் பழனிசாமி சொன்னார்கள். இதற்குத் தலைமையாக இருக்கிற ஜட்ஜையே அரசாங்கம்தான் நியமிக் கிறார்கள். ஆகவே அபலேட் டிரிப்யூனல் வேகன்ஸியை ஹைகோர்ட் தான் பில்லப் பண்ணவேண்டுமென்று சொல்வது பொருத்தமாகாது.

இரண்டாவது இதில் மெம்பராக ஆடிட் மெம்பர்கள்தான் இருக்கிறார் கள். கோர்ட்டுகளில் இருக்கிற நல்ல வழக்கு அறிஞர்களைப் பார்த்து நிய மிப்பதற்கு ஹைகோர்ட்டுக்குச் சந்தர்ப்பம் இருக்கிறது. அதோடு இந்த இலாகா சம்பந்தப்பட்ட ஆடிட், ரெகுலேஷன் எல்லாம் தெரிந்தவர்கள் இருப்பதும் அவசியம். ஆகவே அட்மினிஸ்ட்ரேடிவ் க்வாலிபிகேஷன் உள்ளவர்களை சர்க்கார் இருபது வருஷ காலமாக நியமித்து வருகிறார்கள். மீண்டும் தொடர்ந்து அந்த அதிகாரத்தை சர்க்காரே வைத்துக்கொள்ள வேண்டும் என்றுதான் நினைக்கிறது.

அடுத்தபடியாக ஒரு மெம்பராக இருக்கக் கூடியவர்கள் இலாகாவைச் சேர்ந்தவராக இருக்கக்கூடாது என்று சொன்னார்கள். 25 ஆயிரம் ரூபாய்க்கு மேற்படாத கேஸ்களில்தான் ஒரு மெம்பர் விசாரணைக்கு வரு வார். அது யாராக வேண்டுமானாலும் இருக்கலாம். ஜில்லா அதிகாரியாக வும் இருக்கலாம். அக்கவுண்டு மெம்பராகவும் இருக்கலாம். கோர்ட் மெம்பராகவும் இருக்கலாம். சிறிய கேஸ்களுக்கு இரண்டுபேர் தேவை யில்லை என்பதனால்தான் இப்படிச் செய்யப்பட்டிருக்கிறது. மேலும் இதற்கு இன்னார்தான் இருக்க வேண்டுமென்பதும் இல்லை. அதேசமயத் தில் ஸ்ரீ லாசர் சொன்னார்கள். சட்டப் பிரச்னை எழுமானால் அவர்களால் தீர்க்க முடியாது என்று. ப்ரொவைசோவை அவர்கள் படிக்கவில்லை. சட்டப் பிரச்னை எழக்கூடிய கேஸ்கள் வரும்போது இந்த ஒரு மெம்பர் இது சம்பந்தமாக வழக்கை பெஞ்சுக்கோ பெஞ்சாக இருந்தால் புல் பெஞ்சிக்கோ ரெபர் பண்ணி அந்த முடிவையே கொடுக்க வழி செய்யப் பட்டிருக்கிறது.

'Provided that if any case which comes up before a single member (who is not the Chairman) or a Bench (of which the Chairman is not a member) involves a question of law, such single member or Bench may, in his or its discretion, reserve such case for decision by a Bench of which the Chairman shall be a Member'.

13th February 1959] [Sri R. Venkataraman]

ஆகவே அவர்கள் சொல்வதற்கு அர்த்தமில்லை என்று சொல்ல விரும்புகிறேன். மேலும் அவர் இந்த 4-வது பிரிவினையே எடுத்துவிட வேண்டுமென்று ஒரு திருத்தம் கொடுத்திருக்கிறார்கள். இதில் அபலேட் டிரிப்யூனலுக்கு சில அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. கனம் பழனிசாமி அவர்கள் "ப்ரீவியஸ் சாங்ஷன் ஆப் த கவர்ன்மெண்டு" என்று இருப்பதை எடுத்துவிட வேண்டுமென்று சொன்னார்கள். கேஸ்கள் எப்படி நடத்த வேண்டும் என்பதில் சர்க்கார் ஒரு நாளும் தலையிடாது. ஆனால் டிரிப்யூனல் உட்கார்ந்து விசாரணை செய்வதாக இருந்தால் செலவு ஆகிறது. அந்தச் செலவுகளுக்கு சர்க்கார்தான் அனுமதி அளித்தாகவேண்டும். அதற்காகத்தான் இந்த ஷரத்து இருக்கிறதே தவிர அவர்கள் முடிவு செய்கிற கேஸ்களில் தலையிடவேண்டும் என்பதைற்காக அல்ல. சர்க்கார் ஒரு நாளும் தலையிடாது. ஆகவே இதை நீக்கிவிட வேண்டும் என்பதற்கும் அவசியமில்லையென்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஆகவேதான் இந்தத் திருத்தங்களை ஒத்துக்கொள்ள முடியாமல் இருக்கிறதென்று சொல்ல விரும்புகிறேன்.

SRI S. LAZAR : Mr. Speaker, Sir, I want to explain . . .

MR. SPEAKER : The hon. Member cannot make a second speech. The hon. Member has already spoken on the clause and the Hon. Minister has replied to that.

SRI S. LAZAR : We are on an important business therefore I want to make myself clear . . .

MR. SPEAKER : I cannot allow a second speech (seeing the hon. Member still standing). Will the hon. Member please resume his seat. When the Chair is on its legs, the hon. Member must sit down.

Now I am going to put the amendments to the vote of the House.

The amendments were put and lost.

Clause 30 was put and carried.

*Clause* 31.

MR. SPEAKER : The motion is—

'That clause 31 do stand part of the Bill'.

SRI N. K. PALANISAMI : Mr. Speaker, Sir, I move the amendments standing in my name, namely :

(1) In sub-clause (1) *for* the word and figure, "section 12" *substitute* the words and figures "section 7, section 12, section 13".

(2) In the second proviso to sub-clause (1), *omit* the words "or of such instalments thereof as might have become payable as the case may be".

(3) In item (*a*) (i), of sub-clause (3), *omit* the word "enhance".

The amendments were duly seconded.

MR. SPEAKER : The clause and the amendments are before the House for discussion.

10-40 a.m. SRI N. K. PALANISAMI : இந்தத் திருத்தத்தில் அப்பீல் என்பதில் காம்பவுண்ட் செய்த வரியை ஆபீசர் ஒத்துக்கொள்ளாவிட்டால் அதற்கு அப்பீல் இதில் சேர்த்துக்கொள்ள வேண்டும். சர்க்கார் கொடுக்க வேண்டிய தொகையை இன்ஸ்டால்மெண்டாகக் கொடுத்தால், இன்னும் கொஞ்சம் அதிகமான தொகை சர்க்காருக்குக் கட்டவேண்டியதற்காக இதில் ஷரத்து சேர்க்கப்பட்டிருக்கிறது. அபராதம் போட்டால், அதற்கு அப்பீல் செய்தால் நியாயம் கிடைக்குமா என்று தெரியவில்லை. இருக்கக் கூடிய நிலைமையில் நியாயம் கிடைக்குமென்று தெரியவில்லை. ரிவிஷனுக்கு கொடுக்கப்படுகிறது நியாயமா நியாயம் இல்லையா என்று முடிவு எப்படி இருக்கும் என்று தெரியவில்லை. இதைச் செய்யத் தவறியிருக்கிறது. இதில் என்ஹான்ஸ்மெண்ட் என்ற வார்த்தையை நீக்கவேண்டும். ஆகவே நாங்கள் கொடுத்திருக்கின்ற திருத்தத்தை ஆலோசித்து ஆதரிக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : இந்தச் சட்டத்திலே சில விஷயங்களை அப்பீல் செய்தால் அது செல்லாது என்று சொன்னால் அதற்கு ரிவிஷன் கொடுக்கப்பட்டிருக்கிறது. ப்ரொவிஷனல் அசெஸ்மெண்ட் செய்து காம்பவுண்ட் ரேட் போட்டுவிட்டால் ரிவிஷனுக்குப் போகலாம் அதற்குமேல் போகமுடியாது. காரணம் ப்ரொவிஷனல் அஸ்ஸஸ்மெண்ட் செய்து ஆவதற்கு ஒரு வருஷம் ஆகும். ப்ரொவிஷனல் அஸ்ஸஸ்மெண்ட் அதிகமாக வசூல் செய்திருந்தால் சேரவேண்டிய தொகைக்கு கிரெடிட் கொடுத்துவிட்டு பாக்கியை அவர்களுக்கு ரிபண்ட் செய்வதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. மேல் அப்பீல் கொடுத்தால் இதில் சிக்கல் தான் ஏற்படும். Final Assessment வரைக்கும் அஸெஸ்மெண்ட் வரைக்கும் மீண்டும் மீண்டும் அப்பீல் செய்துகொண்டே இருந்தால் விஷயம் தீர்ந்தபாடாகாது. ஆகவே இந்த 104-வது அமெண்ட்மெண்ட் தேவையில்லை. 105-ஆவது அமெண்ட்மெண்ட் இதனால் வியாபாரிகளுக்கு பாதகம்தான் ஏற்படும். அவர்கள் கொடுக்கவேண்டிய தொகை பூராவும் இன்ஸ்டால்மெண்டாக கொடுப்பது கஷ்டமாக இருக்கும் என்று சொல்கிறார்கள். இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொண்டால் அவர்கள் முழுத் தொகையையும் ஒரே சமயத்தில் கட்டவேண்டியிருக்கும். இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொண்டால் பாதகம் அதிகமாக இருக்குமே தவிர சாதகம் ஒன்றும் ஏற்படாது. ஆகவே இந்தத் திருத்தம் அவசியம் இல்லை.

முன்னூற்று ஆறாவது திருத்தம். வியாபாரிகளின் கணக்கு புஸ்தகங்களைப் பார்த்து அவர்களுக்கு எவ்வளவு வரி போட வேண்டும் என்பதையொட்டி அவர்களுக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்த அதிகாரம் அதிகப் படியாக இருக்கிறது என்று சொன்னார்கள். அவ்விதம் அதிகாரம் கொடுப்பது குற்றம் அல்ல. அது பீனல் கோட் பிரகாரம் குற்றம் அல்ல. ஆகவே இதில் அவர்கள் கொடுக்கப்பட்டிருக்கும் திருத்தம் அவசியம் இல்லை.

The amendment relating to the second proviso to sub-clause (1) was, by leave, withdrawn.

The other two amendments were put and lost.

Clause 31 was put and carried.

Clause 32 was put and carried.

*Clause* 33.

MR. SPEAKER : The motion is—

'That clause 33 do stand part of the Bill'.

13th February 1959]

THE HON. SRI R. VENKATARAMAN : Mr. Speaker, Sir, I move :

'In sub-clause (3), *for* the words "such enquiry", *substitute* the words "such inquiry".'

It is only intended to correct a typographical error in the word 'enquiry'. The word should begin with the letter 'i' instead of the letter 'e'.

SRI S. LAZAR : Mr. Speaker, Sir, I move my amendment, namely :

'In the proviso to sub-clause (4), *for* the word "is", *substitute* the word "in".'

The amendment was duly seconded.

THE HON. SRI R. VENKATARAMAN : செலக்ட் கமிட்டி ரிபோர்ட்டில் "In" என்றிருக்கிறது. ஆனால் கெஜட் காப்பியில் "is" என்று போட்டிருக்கிறது.

MR. SPEAKER : Is the hon. Member withdrawing his amendment in view of the reply of the Hon. Minister?

SRI S. LAZAR : Yes, Sir.

The amendment was by leave withdrawn.

MR. SPEAKER : The question is :

'In sub-clause (3), *for* the words "such enquiry", *substitute* the words "such inquiry".'

The amendment was put and carried.

The clause as amended was put and carried.

Clause 34 was put and carried.

*Clause* 35.

MR. SPEAKER : The motion is—

'That clause 35 do stand part of the Bill'.

THE HON. SRI R. VENKATARAMAN : Mr. Speaker, Sir, I move the following amendments :

'In sub-clause (2), *for* the word "applications", *substitute* the word "application".'

'In the proviso to sub-clause (4), *for* the word "Board" *substitute* the words "Board of Revenue".'

SRI N. K. PALANISAMI : Mr. Speaker, Sir, I move the following amendment, namely :

'In sub-clause (3) *omit* the last sentence, viz., "such an order shall be final and shall not be liable to be questioned in any court of law".'

The amendment was duly seconded.

MR. SPEAKER : The clause and the amendments are before the House for discussion.

10-50 a.m. **SRI N. K. PALANISAMI** : கனம் சபாநாயகர் அவர்களே, " such an order shall be final and shall not be liable to be questioned in any court of law " என்ற வார்த்தைகள் கொண்ட கடைசி வாக்கியத்தை உப பிரிவு (3) லிருந்து நீக்கிவிட வேண்டும் என்று நான் திருத்தம்கொடுத்திருக்கிறேன். இந்த வாக்கியம் இங்கே இருந்தால், அந்த ஆர்டருக்கு எதிராக அப்பீல் செய்துகொள்ளும் உரிமைகூட சம்பந்தப்பட்ட விண்ணப்பதாரருக்கு, இல்லாதுபோய் விடும். இவ்வாறு அந்த நபர் கோர்ட்டிற்குப் போகக் கூடாது என்று சொல்வது, அரசியல் சட்டத்தில் அவருக்கு அளிக்கப் பட்டிருக்கும் உரிமையிலிருந்து அவரை " ஸஸ்பெண்ட் " பண்ணுவது ஆகும். ஆகவே அப்பீல் செய்துகொள்வதற்கு இவர்களுக்கு உரிமை இருக்க வேண்டும் என்பது என் கருத்து.

மேலும், ஒரு கேஸ் நடந்தால் அதற்கான செலவைப் பொறுத்த வரையில், அவரவர்கள் செலவை அவரவர்கள் ஏற்க வேண்டும் என்று இருந்தது. ஆனால், இந்த மசோதாவில், அது சம்பந்தப்பட்ட பணத்தை வியாபாரிகளிடமிருந்து வசூலிப்பதற்கும் வகைசெய்யப்பட்டிருக்கிறது. அது கூடாது என்று நான் திருத்தம் கொடுத்திருக்கிறேன். என்னுடைய திருத்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொள்கிறேன்.

**THE HON. SRI R. VENKATARAMAN** : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த ஆர்டர்கள் சாதாரணமாக ஆர்டர்கள், அஸெஸ்மெண்ட் ஆர்டர்கள் என இருவகைப்பட்டவை. சில விஷயங்களில் அப்பீலும் சில விஷயங் களில் ரிவிஷன் மனுவும் செய்யப்படுகிறது. சிறு சிறு விஷயங்களைப் பொறுத்தவரையில், போர்ட் ஆப் ரெவின்யூ ரெவிஷன் செய்யும். சிறிய விஷயங்களுக்கு போர்ட் ஆப் ரெவின்யூவிடம், ரெவிஷன் கோரி மனுச் செய்துகொள்ளலாம். அஸெஸ்மெண்டுகளைப் பொறுத்தவரையில், ஹைக்கோர்ட்டுக்குப் போகலாம். ஹைக்கோர்டிற்குப் போவதற்குரிய உரிமையை அந்த அளவிற்கு கொடுத்திருக்கிறோம். அந்த உரிமையை இதற்கு மேல் கொடுக்க வேண்டிய அவசியம் இல்லை.

The Government amendments were put and carried.

The amendment of Sri N. K. Palanisami was put and lost.

Clause 35 as amended was put and carried.

*Clause* 36.

**MR. SPEAKER** : The motion is—

' That clause 36 do stand part of the Bill '.

**SRI N. K. PALANISAMI** : Sir, I move the following amendment.

' In item (*a*) (i) of sub-clause 3, *omit* the word " enhance ".

The amendment was duly seconded.

**SRI S. LAZAR** : Sir, I move the following amendment—

' In sub-clause (3), *for* the words " of sub-section (6) and section 38 ", *substitute* the words " of sub-section (6) of section 38 ".'

The amendment was duly seconded.

13th February 1959]

SRI N. K. PALANISAMI : Sir, I move the following amendment—

'In sub-clause (7), *omit* the words "except as provided in the rules made under this Act".'

The amendment was duly seconded.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I move the following amendment—

'In sub-clause (9), *for* the expression, "as assessed by the appropriate authority", wherever it occurs, *substitute* the expression, "as determined by the Appellate Tribunal".'

MR. SPEAKER : The clause and the amendments are before the House for discussion.

(Sri R. Subramaniam in the Chair.)

SRI S. LAZAR : கனம் சபாநாயகர் அவர்களே, "ஒரிஜினல் கெஜெட் பப்ளிகேஷன்"-ல் "of" என்று இருந்தால் என்னுடைய திருத்தத்தை நான் வலியுறுத்தவில்லை.

36-வது பிரிவின் உப பிரிவு (3) (b)-யின் கடைசி ப்ரொவைஸோவில் "**Provided further that..........the Appellate Tribunal may defer the hearing of the appeal before it, till such revision petition in the High Court or the appeal in the Supreme Court is disposed of**" என்று சொல்லப்பட்டிருக்கிறது. இது ஒரு நவீன முறையாக இருக்கிறது. இதுபோன்ற எத்தனையோ ட்ரிப்யூனல்கள் இப்போது நாட்டில் நடந்துவருகின்றன. அவை சம்பந்தப்பட்ட சட்டங்களில் இதுபோன்ற ப்ரொவைஸோக்களை ஏற்படுத்தியதில்லை. காரணம், ட்ரிப்யூனல்கள் அவ்வாறு இயங்கினால் தீர்ப்புகள் அளிக்கப்படுவதில் காலதாமதம் ஏற்படும். ஒவ்வொரு நாளும் ஹைக்கோர்ட்டாலும், சுப்ரீம் கோர்ட்டாலும் எத்தனையோ தீர்ப்புகள் கொடுக்கப்படுகின்றன. வழக்குகளில் தங்கள் தீர்ப்புகளைக் கூறும் விஷயத்தில், மேல் கோர்ட்டுகள் என்ன தீர்ப்பு கொடுக்கப்போகின்றன என்று கீழ்க் கோர்ட்டுகள் காத்துக்கொண்டிருப்பதில்லை. அவ்வாறு இருந்தால் அதிகமான காலதாமதம் ஆகும். ஆகவே அவசியமில்லை என்றால் அந்த ப்ரொவைஸோவை எடுத்துவிட வேண்டும் என்று அரசாங்கத்தாரைக் கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் சேர்மன் அவர்களே, முதலில் கனம் அங்கத்தினர்களுடைய திருத்தங்கள் சம்பந்தமாகப் பேசிவிட்டு, பிறகு சர்க்கார் திருத்தத்திற்கு விளக்கம்கூற விரும்புகிறேன். அஸெஸ்மெண்டை "என்ஹான்ஸ்" பண்ணக்கூடாது என்று கனம் அங்கத்தினர் ஸ்ரீ பழனிசாமி சொன்னதற்கு முன்பே பதில் சொல்லிவிட்டேன்.

கனம் அங்கத்தினர் ஸ்ரீ லாஸர் அவர்களை, தயவு செய்து 38-வது பிரிவைப் பார்க்கும்படி கேட்டுக்கொள்கிறேன். "ரெவ்யூ" பண்ணுவதற்குரிய அதிகாரம் அப்பெலேட் ட்ரிப்யூனலுக்கும் இருக்கிறது, ஹைக் கோர்ட்டிற்கும் இருக்கிறது. 38-வது பிரிவின் (6)-வது உப பிரிவைப் பார்த்தால், 38-வது பிரிவில் உள்ள ரெவ்யூ "பைனல்"-ஆக இருக்க வேண்டுமானால், அது (6)-வது உப பிரிவில் குறிப்பிடப்பட்டுள்ள ரெவ்யூவிற்கு உட்பட்டு இருக்க வேண்டும் என்பது தெரியும். ரெவ்யூ "பைனல்"-ஆக இருக்க வேண்டும் என்று இருக்கிறது. ஆகவே இது சரியான வாசகமாகத்தான் இருக்கிறது.

[Sri R. Venkataraman] [13th February 1959

இந்தப் பிரிவிற்கு சர்க்கார் கொடுக்கும் திருத்தம் இது தான்— " as assessed by the appropriate authority என்ற வார்த்தைகளுக்குப் பதிலாக " as determined by the Appellate Tribunal " என்ற வார்த்தைகளைப் போட வேண்டும் என்று சொல்கிறோம். தெற்குக் காரணம் சொல்கிறேன். முதலில் செய்யப்பட்ட " அஸெஸ் இமண்ட் " 20,000 ரூபாயாக இருக்கக்கூடும். பிறகு அப்பீலில் அது 50,000 அல்லது 60,000 ரூபாயாக உயர்த்தப்பட்டிருக்கக்கூடும். அந்த நிலைமையில், இப்போதுள்ள சட்டப்படி, அஸெஸ்மெண்ட் 20,000 ரூபாயாகத்தான் இருக்கிறது. ஆகவே, ஹைக்கோர்ட்டிற்குச் செல்ல உரிமை இல்லை என்று வாதாட முடியும். அப்படி இருக்கக்கூடாது என்பது சர்க்காரின் கருத்து. முதலில் அஸெஸ் பண்ணியதை கவனிக்காமல், கடைசியாக " டிடெர்மின் " செய்யப்பட்டதைக் கவனித்து ஹைக்கோர்ட்டுக்குச் செல்லுவதற்கு உரிமை இருக்க வேண்டும் என்பது சர்க்காரின் நோக்கம். வியாபாரிக்கு கடைசியாக டிடெர்மின் செய்யப்பட்ட தொகை 50,000 ரூபாய்க்கு மேற்பட்டு இருந்தால் அவர் ஹைக்கோர்ட்டுக்குச் செல்லுவதற்கு உரிமையுடையவராக இருக்க வேண்டும் என்று சர்க்கார் விரும்புகிறது. வர்த்தகர்களுக்கு பாதகம் இல்லாமல் இருப்பதற்காக இந்தத் திருத்தத்தைக் கொடுத்திருக்கிறோம். கடைசியாக நிர்ணயிக்கப்படும் தொகை, அப்பெல்லேட் ட்ரிப்யூனலால் " டிடெர்மின் " செய்யப்படும் தொகை, 50,000 ரூபாய்க்கு மேற்பட்டு இருந்தால் ஹைக்கோர்ட்டிற்குச் செல்ல அவர்களுக்கு உரிமை அளிக்கப்படுகிறது. இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கனம் அங்கத்தினர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

The amendments of Sri N. K. Palanisami were put and lost.

The amendment of Sri S. Lazar was by leave withdrawn.

The Government amendment was put and carried.

Clause 36 as amended was put and carried.

Clause 37 was put and carried.

*Clause* 38.

TEMPORARY CHAIRMAN (SRI R. SUBRAMANIAM) : The motion is—

11-00 a.m. ' That clause 38 do stand part of the Bill '.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I move the following amendments—

' In sub-clause (1), *for* the expression, " as assessed by the Appropriate Authority ", *substitute* the expression " as determined by the Appellate Tribunal ".'

' In the proviso to sub-clause (1) *for* the words " has sufficient cause ", *substitute* the words " had sufficient cause ".'

SRI N. K. PALANISAMI : Sir, I move the following amendment—

' In sub-clause (1), *omit* the words " in any case in which the total turnover as assessed by appropriate authority is Rs. 50,000 or over and ".

The amendment was duly seconded.

13th February 1959]

TEMPORARY CHAIRMAN (SRI R. SUBRAMANIAM) : The clause and the amendments are before the House for discussion.

SRI N. K. PALANISAMI : இப்போது 50,000 ரூபாய்க்கு மேல் இருந்தால்தான் ஹைக்கோர்ட்டுக்கு அப்பீல் போகலாம் என்றிருக்கிறது. 50,000-க்கு குறைவாக டர்ன்ஓவர் இருந்தால் டிபார்ட்மெண்ட் சொல்லக் கூடியதே நியாயம் என்று சர்க்கார் சொல்கிறதா என்று தெரியவில்லை. கோர்ட்டுக்கு போகக்கூடாது என்று சொல்வதற்கு யாருக்கும் உரிமை இல்லை. 50,000-க்கு மேல் இருந்தால்தான் ஹைக்கோர்ட்டிற்கு போகலாம், ரிவிஷனுக்கு என்று இருப்பது கூடாது. சாதாரண வியாபாரிகளும் போவதற்கு வகை இருக்க வேண்டும். ஆகவே 50,000-க்கு மேல் என்று இருக்கக்கூடாது. ஆகவே எனது திருத்தத்தை ஏற்றுக்கொள்ளவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : சேர்மன் அவர்களே, இந்தத் திருத்தம் நன்கு பரிசீலிக்கப்பட்டு நிராகரிக்கப்பட்டது. காரணம், 50,000-க்கு குறைவாக இருப்பவர்களுக்கு இரண்டு, மூன்று அப்பீல்கள் கொடுக்கப்பட்டிருக்கிறது. மேலும் மேலும் கோர்ட்டில் வியாபாரிகள் சுற்றித் திரியாமல் இருக்கவேண்டுமென்றுதான் ஹைக்கோர்ட்டிற்கு மற்றொரு அப்பீல் கொடுக்கவேண்டியதில்லை என்று முடிவு செய்யப்பட்டது. பழனிசுவாமி அவர்கள் தவறுதலான சட்ட ஞானத்தில் உழல்கிறார்கள் என்று நினைக்கிறேன். எந்தச் சட்டத்திலும் நாம் அப்பீல் இல்லையென்று சொல்லிவிட்டால் ரிட் போடுவதற்கு அதிகாரம் இருக்கிறது. அதை யாரும் எடுத்துவிடவில்லை. ஆகவே ஹைக்கோர்ட்டிற்குப போக அதிகாரமில்லை, அதிகாரமில்லை என்று திரும்பத் திரும்பச் சொல்வது பொறுத்தமல்ல சட்டப் பிரச்னையாக இருந்தால் ஹைக்கோர்ட்டில் ரிட்டிற்கு போகலாம். ரிட்டிற்கு போக வேண்டிய கேஸ்களில் ரிட்டிற்கு போகலாம். " பாக்ட்ஸ்"-ல் போக முடியாது.

The Government amendments were put and carried.

The amendment of Sri N. K. Palanisami was put and lost.

Clause 38 as amended was put and carried.

Clause 39 was put and carried.

*Clause* 40.

TEMPORARY CHAIRMAN (SRI R. SUBRAMANIAM) : The motion is—

" That Clause 40 do stand part of the Bill ".

SRI S. LAZAR : Sir, I move—

" *For* the words " in any of the languages specified in the Eighth Schedule to the Constitution ", *substitute* the words " in the regional language ".

The amendment was duly seconded.

TEMPORARY CHAIRMAN (SRI R. SUBRAMANIAM) : The clause and the amendment are before the House for discussion.

SRI S. LAZAR : சேர்மன் அவர்களே, இப்பொழுதிருக்கிற முறைப்படி வியாபாரம் செய்யும் ஒருவர் கான்ஸ்டிட்யூஷன், 8-வது ஷெட்யூலில் உள்ள எந்த பாஷையில் வேண்டுமானாலும் கணக்கு வைத்துக்கொள்ளலாம் என்றிருக்கிறது. அப்படிப் பார்க்கிறபோது அதில்

14 பாஷைகள் இருக்கின்றன. அதாவது, Assamese, Bengali, Gujarati, Hindi, Kannada, Kashmiri, Malayalam, Marathi, Oriya, Punjabi, Sanskrit, Tamil, Telugu, Urdu. அப்படியில்லையென்று சொன்னால், ஆங்கிலத்தில் வைத்துக்கொள்ளலா மென்று இருக்கிறது. இது நடை முறையில் வரும்போது வியாபாரிகளின் கணக்குகளைத் தணிக்கை செய்யும் போது ஏற்படும் கஷ்டங்களைப்பற்றி அந்த இலாகா அதிகாரிகள் தான் அறிவார்கள். தப்பித் தவறி கோர்ட்டுகளின் கேஸ்கள் வரும் போது அதிலுள்ள அவஸ்தைகள் எங்களுக்குத்தான் தெரியும். கோர்ட்டிற்கு வரும்போது பாஷை தெரியாமல் திண்டாட வேண்டி யிருக்கிறது. ஆகவே எந்த பாஷையில் வேண்டுமானாலும் வைத்துக்கொள்ள லாம் என்ற முறையை மாற்றி, தமிழ் நாட்டைப் பொறுத்த சட்டமாக இது இருப்பதாலும், ரீஜனல் லாங்குவேஜ் என்று மாற்றியமைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். பெருவாரியான முறையில், தமிழிலும், ஒரு சிலவிடங்களில் கன்னடத்திலும், ஒரு சிலவிடங்களில் மலயாளத்திலும் வேண்டுமானால் அமையலாம். அப்படியிருந்தால் அதிகாரிகளுக்கும் தொந்தரவு இராது. ஆகவே, அவர்களும் தனி பரீட்சைகளுக்குச் செல்லவேண்டியதில்லை. ஆங்கிலத்திலும் இருக்கலாம் என்றிருக்கிறது. ஆகவே இதை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

* **SRI M. P. SUBRAMANIAM** : இந்த அமெண்ட்மெண்டை ஆதரித்து நான் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்தத் திருத்தம் ஆங்கிலத்தில் அல்லது ரீஜனல் லாங்குவேஜில் கணக்குகள் வைத்துக் கொள்ளவேண்டுமென்பதாகும். ஏற்கெனவே இந்தச் சட்டசபையில் நாம் இயற்றியிருக்கும் கடன்காரர்கள் சட்டத்தில் கூட அதுபோலவே கொடுத்திருக்கிறோம். எந்த மொழியில் வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளலாம் என்று சொன்னால், அதற்கு அனுமதி கொடுத்தால் எல்லா மொழிகளிலும் பயிற்சி பெற்ற அதிகாரிகளைத்தான் நாம் வைத்துக் கொள்ள முடியும். அப்படிப்பட்டதொரு நிர்ப்பந்தம் இருக்கிறது. தமிழ் நாட்டில் வியாபாரம் செய்பவர்கள் அல்லது வெளியிடங்களில் இருந்து இங்கு ஏஜெண்ட்களாக வந்து வியாபாரம் செய்பவர்கள் ஆங்கிலம் அல்லது பிரதேச மொழியில் கணக்குகள் வைத்துக் கொள்வது என்பது முடியாத காரியமல்ல. அந்தப் பகுதி மக்களோடு தொடர்பு வைத்துக் கொள்ள வேண்டிய நிலை இருப்பதாலும், எந்த மொழிகளிலும் கணக்குகள் வைத்துக்கொள்ளலாம் என்றிருந்தால் கணக்குகளைப் பரிசோதனை செய்பவர்கள் எல்லா மொழிகளையும் அறிந்திருக்க வேண்டுமென்ற நிர்ப் பந்தம் ஏற்படுவதாலும், ஆங்கிலத்தில் அல்லது பிரதேச மொழியில் கணக்குகள் வைத்துக்கொள்ள வேண்டுமென்று இருப்பதை ஒப்புக் கொள்வதால் சம்பந்தப்பட்ட வியாபாரிகளுக்குப் பெரிய கஷ்டம் ஒன்றும் ஏற்படப் போவதில்லை. ஆகவே, இதை அமைச்சர் அவர்கள் பெரு நோக்கோடு ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

**THE HON. SRI R. VENKATARAMAN** : கனம் சேர்மன் அவர்களே, சென்னை ராஜ்யத்திலுள்ள வியாபாரிகள் தங்கள் தங்கள் மொழிகளில் கணக்குகளை வைத்துக்கொண்டால், கணக்குகள் தயாரிப்பதில் டிலே இல்லாமல் இருக்கிறது. ஆகவே அந்த அனுமதியைக் கொடுக்கவேண்டு மென்று டாக்டர் லோகநாதன் அவர்களிடம் அவர்கள் வந்து முறையீடுகள் செய்தார்கள். அதையொட்டித்தான் டாக்டர் லோகநாதன் அவர்கள் குஜராத்தி செக்ஷன் என்று ஒன்று வைக்கவேண்டுமென்று சொன்னார்கள். நான் ஏற்கெனவே சொன்னேன், டாக்டர் லோகநாதன் அவர்கள் சிபார்சில் இரண்டைத் தவிர எல்லாவற்றையும் ஒத்துக்கொண்டோம் என்று. இது, அதற்கு ஒரு அத்தாட்சி. மணி-லெண்டெர்ஸ் ஆக்ட்க்கும் இதற்கும் வித்தியாசம் உண்டு. அதில் ஏழைகளின் நகைகள் போன்றவைகளை அடகுக்கு வாங்கி கணக்கு வைத்து அவைகளைத் திருப்பிக் கொடுக்கவேண்டிய நிலை இருக்கிறது. இது வெறும்வாணிபம். இதனால் டிப்பார்ட்மெண்டினரை ஏமாற்ற முடியாது. வியாபாரிகளுக்குச் சலுகை காட்டவேண்டுமென்று செய்யப்பட்ட

13th February 1959]    [Sri R. Venkataraman]

ஷாத்தாகும் இது. ஆகவே, கோர்ட்களில் அப்பியர் ஆகிறவர்களுக்கு கஷ்டம் என்பதினுலோ அல்லது நிர்வாகம் செய்பவர்களுக்குக் கஷ்டம் என்பதினுலோ நாட்டின் முதுகெலும்பு போன்ற வியாபாரிகளை கஷ்டத்திற்குள்ளாக்கக்கூடாது என்று நினைக்கிறேன். ஆகவே, இதை ஏற்றுக் கொள்வதற்கில்லை.

SRI S. LAZAR : I am not pressing my amendment.

SRI A. GOVINDASAMY : We do not give permission to the hon. Member for withdrawing his amendment.

TEMPORARY CHAIRMAN (SRI R. SUBRAMANIAM) : The question is—

*For* the words " in any of the language specified in the Eighth Schedule to the Constitution ", *substitute* the words " in the regional language ".

The amendment was put and lost.

Clause 40 was put and carried.

*Clause* 41.

TEMPORARY CHAIRMAN (SRI R. SUBRAMANIAM) : The motion is—

" That Clause 41 do stand part of the Bill ".

SRI N. K. PALANISAMI : Sir, I move—

In sub-clause (1), *for* the words " any officer " *substitute* the words " The Deputy Commercial Tax Officer or the Commercial Tax Officer ".

In sub-clause (1) *for* the words " relating to his business " *substitute* the words " within his knowledge ".

The amendments were duly seconded.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I move—

'To sub-clause (2), *add* the following proviso, viz.,

" Provided that no residential accommodation (not being a place of business-cum-residence) shall be entered into and searched by such officer except on the authority of a search warrant issued by a Magistrate having jurisdiction over the area, and all searches under this sub-section shall, so far as may be, be made in accordance with the provisions of the Code of Criminal Procedure, 1898 (Central Act V of 1898) "

In sub-clause (3), *omit* the second proviso.'

SRI N. K. PALANISAMI : Sir, I move—

In the second proviso to sub-clause (3), *for* the brackets and words " (not being a place of business-cum-residence) ", *substitute* the brackets and words " (residential portion of place of business-cum-residence) ".

The amendment was duly seconded.

TEMPORARY CHAIRMAN (SRI R. SUBRAMANIAM) : The clause and the amendments are before the House for discussion.

**SRI N. K. PALANISAMI :** கனம் சேர்மென் அவர்களே, "Any Officer empowered by the Government in this behalf" என்றிருப்பதற்குப் பதிலாக டி.வி.டி.ஓ. என்றோ அல்லது வி.டி.ஓ. என்றோ இருக்க வேண்டும் என்பதுதான் என்னுடைய திருத்தம். அதோடு "Other docu ents and to finish any other informatio relating to his business" என்றிருப்பதற்குப் பதிலாக கடைசியில் "within his knowledge" என்று சேர்த்துக்கொள்ளவேண்டும் என்று திருத்தம் கொடுத்திருக்கிறேன். ஏனென்றால் ஒரு வியாபாரிக்கு தனக்குத் தெரிந்த விஷயத்தைத்தான் சொல்லுவதற்கு முடியும். தனக்குத் தெரியாத விஷயத்தையும் சொல்லவேண்டும் என்று சொல்லுவது நியாயமல்ல. "The fundamental principle is that one should not be compelled to give witness against himself" என்பது சாதாரணமாக இருக்கக்கூடிய விதி. தெரியாத விஷயத்தையும் சொல்லித்தான் தீர வேண்டும் என்று சொல்வது பொருத்தமாக இல்லை. இன்னொரு திருத்தம், என்னவென்றால் இந்தச் சட்டத்தில் "Provided further that no residential accommodation not being a place of busin ss-cum-residence" என்று சொல்லப்பட்டிருக்கிறது. சாதாரணமாக சிறு ஏழை வியாபாரிகளை எடுத்துக் கொண்டால் அவர்களுடைய வீடும் கடையும் ஒன்றாகத்தான் இருக்க முடியும். அதே போன்று பெரிய வியாபாரிகளுக்கு பங்களா தனியாக இருக்கும். இந்த இடங்களைப் பரிசோதனை செய்வதில் என் வித்தியாசம் காட்டப்பட்டிருக்கிறது என்று தெரியவில்லை. ஆகவே, இதில் நான் கொடுத்திருக்கும் திருத்தத்தையும் ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

**THE HON. SRI R. VENKATARAMAN :** கனம் சேர்மன் அவர்களே, இந்தச் சட்டத்தில் பலவிதமான அதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அதாவது கணக்குகளைப் பரிசோதனை செய்வதற்கும் சரக்குகளைப் பரிசோதனை செய்வதற்கும் இதில் அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. சர்க்கார் யாரிடத்தில் இந்த அதிகாரத்தை கொடுத்தால் சரியாக இதை நடத்த முடியுமோ அதன்படி இந்த அதிகாரத்தை கொடுக்கும். அதல்லாமல் இந்த அதிகாரத்தை வீ.டி.ஓ. போன்றவர்களிடத்தில் ஒப்படைப்பதானால் டெப்யூடி கமிஷனர் போன்றவர்கள் போய் பரிசோதனை செய்ய வேண்டிய நிலைமை ஏற்படும். அல்லது எ.வீ.டி.ஓ. போய் கணக்குகளைப் பரிசோதனை செய்யவேண்டிய நிலைமை ஏற்படும். ஆகவே சர்க்காருக்கு எந்தெந்த விதத்தில் அதிகாரிகளை நியமித்தால் திறமையாக நடக்கும் என்பதை அறிந்து அதற்குத் தகுந்தபடி அதிகாரிகளை நியமிப்பதற்காகத்தான் சர்க்கார் இந்த அதிகாரத்தை வைத்துக் கொள்ள வேண்டும் என்று இந்த ஷாத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இதை செலக்ட் கமிட்டியாரும் ஒப்புக்கொண்டார்கள். அடுத்தபடியாக "within his knowledge" என்று போடவேண்டும் என்று கனம் அங்கத்தினர் அவர்கள் திருத்தம் கொடுத்திருக்கிறார்கள். இதைப்பற்றி நான் மீண்டும் சொல்ல விரும்புகிறேன். இதைப்பற்றி நான் முன்பும் சொல்லியிருக்கிறேன். கணக்குகள், வியாபாரம் இவைகளைப்பற்றியுள்ள விவரங்கள் எல்லாம் வியாபாரிக்குத்தான் தெரியும். சர்க்காருக்குத் தெரியாது. கணக்குகளைப்பற்றியுள்ள விவரங்கள் எனக்குத் தெரியாது என்று சர்க்காரை ஏமாற்றுறவர்கள் இருக்கக்கூடாது என்பதற்காகத்தான் இந்த பிரிவு போடப்பட்டிருக்கிறது. இதில் போடப்பட்டிருப்பது தான் நியாயமான முறை. வரிவிதிப்பு சம்பந்தப்பட்ட எல்லாச் சட்டங்களிலும் "Burden of proof"-ஐ சம்பந்தப்பட்ட நபரிடம்தான் போடப்பட்டிருக்கிறது. அடுத்தபடியாக சர்க்கார் கொண்டு வந்திருக்கும் திருத்தம் அதாவது 3-வது சப்-செக்ஷனில் இருக்கும் ப்ரொவிஸோவை 2-வது சப்-செக்ஷனின் ப்ரொவிஸோவாக மாற்றவேண்டும் என்கிற திருத்தம். இதை ஏற்றுக்கொள்ள வேண்டு

மென்று கேட்டுக்கொள்ளுகிறேன். கனம் அங்கத்தினர் பழனிசாமி அவர்கள் "not being a place of business-cum-residence" என்று இருப்பதை ஆட்சேபித்தார்கள். இதில் கணக்குகள் எங்கு வைத்திருக்கப்படு கின்றதோ அந்த இடங்களை யெல்லாம் வியாபார ஸ்தலமாகவே எண்ணப்படும். அதல்லாமல் இருக்கிற இடங்களைப் பரிசோதனை போடுவதற்குதான் கோர்ட்டு உத்தரவு வேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதல்லாமல் இதில் ஏழை வியாபாரிகள் என்றோ பணக்கார வியாபாரிகள் என்றோ சர்க்கார் எந்த முடிவும் எடுக்கவில்லை என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

The amendments of Sri N. K. Palanisami were put and lost.

The Government amendments were put and carried.

The clause, as amended, was put and carried.

*Clause* 42.

TEMPORARY CHAIRMAN (SRI R. SUBRAMANIAM) : The motion is—

'That clause 42 do stand part of the Bill'.

SRI N. K. PALANISAMI : Mr. Chairman, Sir, I move the following amendment, namely :

'In sub-clause (2), *after* the words, 'of the goods', occurring at the end *add* the words 'as found in the consignment note'.

The amendment was duly seconded.

TEMPORARY CHAIRMAN (SRI R. SUBRAMANIAM) : The clause and the amendment are before the House for discussion.

SRI N. K. PALANISAMI : தலைவர் அவர்களே, இதைப்பற்றி நான் பொது விவாதத்தின் போது சொல்ல வேண்டுமென்று நினைத் திருந்தேன். பொதுவாக பல இடங்களில் செக்கிங் போஸ்ட் போட வேண்டு மென்று கேட்டுக்கொண்டிருந்தோம். இப்போது சர்க்கார் ஏற்படுத்தியிருக் கிறார்கள். ஆனால் இவ்விதம் ஏற்படுத்தியிருப்பது ஆந்திரா பிரதேசத்தில் எவ்விதம் ஏற்படுத்தியிருக்கிறார்களோ அதே போன்று நம் ராஜ்யத்திலும் ஏற்படுத்த வேண்டும். அப்போதுதான் சரியான முறையில் வரிகளை வசூ லிக்க முடியும். அதாவது இன்டர்–ஸ்டேட் எல்கையில் சௌக் ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. அந்த இடத்திலே பரிசோதனை நடத்துவதோடுகூட அங் கேயே வரியையும் வசூல் செய்ய வேண்டும். ஆனால் நாம் ஏற்படுத்தியிருப் பதில் வரியை வசூலிப்பதற்கு இல்லை.

(Mr. Speaker in the Chair)

சாதாரணமாக லாரிகளில் பாதி ஒருவருக்கும் பாதி இன்னொருவருக் கும் சாக்குகள் இருக்கும். இந்த மாதிரியான சந்தர்ப்பங்களில் சரியான விதத்தில் கணக்கு வந்து சேராது, அதோடு சரியானபடி வரிகளும் வசூ லாகாது. ஆகவே வரிகளையும் அங்கேயே விதித்து வசூலிக்க வேண்டும். ஆனால் இப்போது நடைமுறையில் என்ன நடக்கிறது என்று பார்த்தால் லாரி ஒன்றுக்கு நான்கு அணா அல்லது எட்டு அணா கொடுத்துவிட்டால் லாரியை பரிசோதனை செய்ய மாட்டார்கள். இதையெல்லாம் தடுக்க வேண்டும். ஆகவே இந்த சௌக்களில் எல்லாம் மேல் அதிகாரிகள் அடிக்கடி போய் பரிசோதனை செய்யவேண்டும். அதோடு சௌக்களில் எடுக்கும் சரக்குகளுக்கு ஒரு சர்டிபிகேட் கொடுக்கவேண்டும். மேலும் கன்ஸைன்மெண்ட் நோட்டும் பெயரும் வைத்துக்கொண்டு சரக்கு கொண்டு போகிற லாரிகள் ஏதாவது தவறான முறையில் செல்லுமானால் அதற்

குள்ள லைஸன்ஸை கான்ஸெல் செய்யும்படியான நிலைமையில் உத்தரவு போட வேண்டும். அப்போதுதான் ஒழுங்காக இந்த முறையை நடத்த முடியும் என்று தெரிவித்துக்கொண்டு என்னுடைய திருத்தத்தை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI S. LAZAR : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த முக்கியமான பிரிவை விவாதிக்கின்ற இநத நேரத்தில் ஒரு விஷயத்தை அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். இம் மாதிரி நாம் போடும் சட்டங்களை நடத்துவதற்கு நியமிக்கும் அதிகாரிகள் சில இடங்களில் தங்கள் அதிகாரங்களை துஷ்பிரயோகம் செய்யக்கூடிய செய்திகள், புகார்கள் நமக்கு வந்துகொண்டிருக்கின்றன. இம்மாதிரி யான அதிகாரிகள் தங்கள் அதிகாரங்களை சரியாக உபயோகித்து வேலை செய்வதில்லை என்கின்ற புகார்கள் அரசாங்கத்துக்கும் வந்துகொண்டிருக்கும் என்று நம்புகிறேன். இதை நாம் கூடியவரைக்கும் தடுக்கவேண்டும். அதோடு இந்த அதிகாரிகளால் பரிசோதனை செய்யப்பட்டு எடுக்கப்படும் சரக்குகளுக்கு அந்த அதிகாரி முறையான ரசீது கொடுக்க வேண்டும் என்று நாம் விதிகள் அமைக்க வேண்டும். இம்மாதிரி எடுக்கப்பட்ட சாமான் களுக்கு அதிகாரிகளால் " கான்பிஸ்கேஷன் ஸர்ட்டிபிகேட் " சொந்தக்காரர் களுக்கு கொடுக்க வேண்டும் என்று இருந்தால்தான் அந்த அதிகாரி களால் சரியான முறையில் அரசாங்கத்திற்கு கணக்குகளை கொடுக்க முடியும். ஆகவே இது போன்ற காரியங்களைச் செய்கின்ற காலத்தில் ரசீது கொடுக்க வேண்டுமென்ற விதியை நாம் அமைத்துவிட்டால் அதிகாரி களின் மீது இப்போது கூறப்படும் புகார்கள் இருக்காது என்று நம்பு கிறேன். ஆகவே இவ்விதம் ரசீது கொடுக்க வேண்டும் என்றுள்ள ஒரு திருத்தத்தை இதில் சேர்த்துக்கொள்ளலாம். இப்போது திருத்தத்தை கொண்டு வர முடியாவிட்டாலும் கூட (ரூல்ஸ்) விதிகளை அமைக்கும்போது இதை முக்கியமாக சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்ள கிறேன்.

11-20 a.m. * SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Mr. Speaker, Sir, I am not in favour of establishing check posts. This has led to abuses as far as the Chingleput border is concerned both at the Red Hills and the Tambaram levels. I have received a lot of complaints that there is corruption and my information is that every day the officers there are receiv.ng Rs. 1,000 by way of *gratis*. I would be glad if this harassment is put an end to and some other method is adopted by which checks can be made periodically and at regular intervals in some important places. Even during pre-Independence days, at the customs post in Pondicherry, in spite of the effective watch by the Customs Department officials they were not able to check it. I do not want that these people should go scot-free without being booked. I would like to know from the Hon. Minister the number of cases so far detected and the amount realised by way of penalty and how effective they have been. At present, buses are being checked. A bus in which I was once travelling was checked for 15 minutes. Even lorries have been checked in season and out of season for long hours. Therefore, I would request the Government to see that they do not cause inconvenience to the travelling public. There should be no harassment and at the same time there should be an effective check.

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, போலீஸ் தவறு செய்கிறார்கள் என்பதற்காக பீனல் கோடையே மாற்றி அமைக்க முடியாது. அதுபோலவே இந்த அதிகாரிகள்

தவறு செயகிறார்கள் என்ற காரணத்திற்காக நாம் செக் போஸ்டையே அபாலிஷ் பண்ணி இஷ்டப்படி சரக்கைக் கொண்டு போகச் சொல்வது நியாயம் இல்லை. காரணம் என்னவென்று சொன்னால் இன்று விற்பனை வரியை ஏமாற்றுவதற்காகவே சரக்குகள் எல்லாம் பிற ராஜ்யங்களுக்குச் சென்று கொண்டிருக்கின்றன. அதைத் தடுப்பது எப்படி என்பதைப் பற்றி எல்லோரும் நன்றாக ஆலோசனை செய்து பார்த்த பிறகு தான். இதைத் தவிர வேறு வழியில்லை என்ற முடிவுக்கு வந்திருக்கிறார்கள். டாக்டர் லோகநாதனும் கூட இந்தச் சிபார்சையே தான் செய்திருக்கிறார். செக் போஸ்டில் செக் பண்ணவேண்டுமென்பது அவரது யோசனைகளில் ஒன்று தான். அவர் சிபார்சுகளில் இரண்டே இரண்டைத் தவிர மற்றது எல்லாவற்றையும் நாம் ஒத்துக்கொண்டிருக்கிறோம் என்று முன்பே சொன்னேன். பிற ராஜ்யங்களின் அநுபவமும் அதுதான். கேரளத்தில் செக் போஸ்டு வைத்திருக்கிறார்கள். ஆந்திராவிலும் செக் போஸ்டு வைத்திருக்கிறார்கள். ஆகவே செக் போஸ்டை எடுத்துவிட வேண்டுமென்ற யோசனை நம் ராஜ்யத்திற்கு நல்லது அல்ல. நம் வருமானம் குறையக் கூடாது. என்கிற கொள்கைக்கும் உகந்தது அல்ல.

இரண்டாவதாக கனம் பழனிசாமி அவர்கள் அரிய யோசனை ஒன்றைச் சொன்னார்கள். இந்த செக் போஸ்டிலேயே அசெஸ்மெண்டு பண்ணி வரி வாங்கிவிட வேண்டும் என்றார்கள். அதை விதிகளின் மூலமாகச் செய்ய முடியும் என்று நினைக்கிறேன். அதை நிச்சயமாகப் பரிசிலனை செய்து செக் போஸ்டிலேயே அசெஸ் பண்ணி வாங்கிவிடுவதுதான் உசிதம். இந்த மாதிரி நிலை பிற ராஜ்யங்களிலும் இருக்கிறது. ஆகவே இந்த யோசனையை விதிகள் அமைக்கும்போது பரிசிலனை செயகிறேன் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

மூன்றாவதாக இதில் எவ்வளவு வருமானம் வந்திருக்கிறதென்று கனம் எதிர்க் கட்சித் தலைவர் கேட்டார்கள். இந்த செக் போஸ்டினால் இன்றைக்கு ஏமாற்றம் பெரும் அளவு குறைந்துவிட்டது என்று சொல்ல முடியும். அந்த இடங்களில் தான் சரக்கு யாருக்குப் போகிறது யாரிடமிருந்து அனுப்பபடுகிறது என்கிற புள்ளி விவரங்களை எல்லாம் சுலபமாகச் சேகரித்துவிட முடிகிறது. இதை வைத்துக்கொண்டு அந்த அந்தப் பிரதேசத்திற்கு அனுப்பி இவ்வளவு சரக்கு இன்னால் அனுப்பப்பட்டிருக்கிறதா, இன்னாருக்கு வந்து சேர்ந்து இருக்கிறதா என்கிற கணக்கை அவர்களிடத்திலே பார்த்து நல்ல முறையில் ஏமாற்றுவதற்கு இடமில்லாத வகையில் அசெஸ் பண்ண முடிகிறது. இந்த முறை நல்ல பலன் அளித்து வருகிறதென்றும் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அதிகாரிகள் ஏதாவது தவறு செய்தால் அதற்காக இந்த முறையை ரத்து செய்துவிடவேண்டும் என்பது சரியான யோசனை ஆகாது. தவறு செய்த அதிகாரிகளை மாற்ற வேண்டும். தக்க தண்டனை அளிக்கவேண்டும். இப்படிப்பட்ட தவறான காரியங்களை அதிகாரிகள் செய்வதாக அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டால் அவர்கள் மீது நிச்சயமாக கடுமையான நடவடிக்கை எடுக்கப்படும் என்று சொல்ல விரும்புகிறேன். கனம் பழனிசாமி கொடுத்திருக்கக்கூடிய திருத்தத்தை ஒத்துக்கொண்டுவிட்டால் பொய்யான பெயர்களை சொல்லிவிட்டு அவர்கள் சரக்குகளைக் கடத்திக் கொண்டு போய்விட முடியும். அதற்குத்தான் அது உதவியாக இருக்கும். ஸிட்டி லிமிட் என்று பெயர் வைத்துக்கொண்டு இப்படி ஏமாற்ற வசதி அளிப்பதா ? அவர்கள் சொல்கிற ஊருக்குப் போய் அந்தப் பெயருடைய நபரே இல்லையென்று ஏமாற்றம் அடைந்து நிற்கிறதா அல்ல ஏமாற்றத்திற்கு வழியில்லாமல் செய்ய வேண்டும் என்பதா ? இதைத் தான் நாம் சிந்திக்க வேண்டும். ஆகவே தான் அவருடைய திருத்தத்தை என்னால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. இதில் தவறு ஏற்படக் கூடாது. தவறு ஏற்பட்டது என்றால் தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளத் தயாராக இருக்கிறேன். பஸ்களிலும்கூட அதிகமாகச் சரக்குகள் கொண்டுபோகிற பஸ்களைத்தான் அப்படிச் சோதனை போடுவார்கள். பஸ்களின் மூலமாகவும் சரக்குகளைக் கடத்திக்கொண்டு போய்விடலாம். ஆகவே அந்த அளவுக்கு எந்தத் தவறும் ஏற்படாத முறையில் கவனித்துப் பார்க்கலாம். என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

The amendment was put and lost.

The clause was put and carried.

Clauses 43 and 44 were put and carried.

*Clause* 45.

MR. SPEAKER : The motion is—

'That clause 45 do stand part of the Bill.'

SRI M. JAGANNATHAN : Sir, I move—

'*Omit* item (c) of sub-clause (2).'

The amendment was duly seconded.

SRI M. JAGANNATHAN : Sir, I move—

'In item (e) of sub-clause (2), *omit* the words " simple imprisonment which may extend to six months or ", and the words " or both ".'

The amendment was duly seconded.

SRI N. K. PALANISAMI : Sir, I move—

'In sub-clause (3), after the words, " any person who ", *substitute* the words " any person who intentionally ".'

The amendment was duly seconded.

MR. SPEAKER : The clause and the amendments are before the House for discussion.

SRI M. JAGANNATHAN : Sir, my first amendment is very simple. It says—

'*Omit* item (*c*) of sub-clause (2) '.

Item (*c*) of sub-clause (2) says—

'dishonestly objects to a notice issued to him under sub-section (1) of section 26, or.'

If we refer to clause 26, we will see that there is a provision made there for further mode of recovery by notice being issued to the dealer concerned for collecting the arrears of tax. Here in this sub-clause, I am sure that if this is retained as such in this Bill, it will work as hardship on poor dealers because nowhere is it defined how the assessing authority is to come to the conclusion in finding out the dishonest intention on the part of the dealer who refuses to receive the notice served to him. We cannot leave this matter to the whims and fancies of the assessing authority and the assessing authority might take it into his head for some personal grudge or rancour that he might harbour against a particular dealer for his private reasons, to say that the particular dealer is dishonestly refusing to receive the notice served to him. In that case, it will work as a hardship on the poor dealers and therefore I request the Hon. Minister to accept my very simple amendment.

13th February 1959]

SRI N. K. PALANISAMI : இதில் ஆபீசர் என்பதற்கு டெப னிஷன் கிடையாது. புதிதாக வந்தவர்கள் சர்ச் பண்ணாமல் போனாலும் வியாபாரி மீது கேஸ் போட்டுவிடுகிறார்கள். அவர்கள் வேண்டுமென்றோ வேண்டாமலோ அவர்கள் மீது நடவடிக்கை எடுக்கவேண்டும். இதற்கு சரியான டெபனிஷன் கிடையாது. சாதாரணமாக தடுத்தால்கூட அவர்கள் மீது கேஸ் போட்டுவிடுகிறார்கள். 11-30 a.m.

SRI M. P. SUBRAMANIAM : கனம் தலைவர் அவர்களே, சில மாதங்களுக்கு முன்பு கோவையிலே அசிஸ்டெண்ட் கமர்ஷியல் டாக்ஸ் ஆபீசர் என்று சொல்லி வியாபாரிகளை ஏமாற்றியதற்காக ஒருவர் கைது செய்யப்பட்டார் என்ற செய்தி பத்திரிகையில் பார்த்தோம். ஆகவே, இந்த ஆபீஸர்களை வியாபாரிகள் தெரிந்துகொள்வதற்காக ஏதாவது உடை அல்லது ஏதாவது அடையாளம் கொடுப்பதற்கு ஆலோசிக்குமா என்று அறிய விரும்புகிறேன் ?

(Sri M. Jagannathan rose .)

MR. SPEAKER : How is the hon. Member entitled to speak again ? He has already spoken once.

SRI M. JAGANNATHAN : I am going to speak on another amendment of mine, Sir.

MR. SPEAKER : When I objected to Sri Lazar speaking again, I must also object to your speaking again. You are supposed to speak on all your amendments.

SRI M. JAGANNATHAN : Speaking about my amendment relating to the imprisonment clause, the provision of imprisonment extending to six months again is unreasonable. In my opinion, it is quite all right if we retain the provision of fine extending to Rs. 1,000, but for subsequent convictions if we resort to imprisonment for six months, I think it is going too far. The poor business community will be harassed too much and the Government will not be in the best books of these people. I am sure, Sir, that will also go against their electoral advantage. Therefore, I appeal to the Government on this occasion at least in their own interest not to insist upon having this imprisonment clause in this Bill.

THE HON. SRI R. VENKATARAMAN : யாராவது மூன்றாவது மனிதர் அஸ்ஸஸிக்கு பணம் கொடுக்கவேண்டியிருந்தாலும் அல்லது பொய்யாக கொடுக்கவேண்டியிருந்தாலும் அவர்கள் மீது நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று இந்தப் பிரிவில் கொடுக்கப்பட்டிருக்கிறது. இல்லை என்று சொன்னால் யாராவது மூன்றாவது மனிதர் அஸ்ஸஸிக்கு கொடுக்க வேண்டிய பணத்தை இல்லை என்று சொல்லிவிட்டால் போதும். ஆதலால் dishonestly என்று சொல்லி இருக்கிறோம். கிரிமினல் ப்ரோஸீஜர் கோடில் இதற்கு டெபனிஷன் இருக்கிறது. இதனால் எந்த விதமான கஷ்டமும் ஏற்படாது என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன். " prevents or obstructs inspection, entry, search or seizure by an officer empowered under section 41" என்று மூன்றாவது ஷரத்தி லும் கூறப்பட்டிருக்கிறது. இருந்தாலும் இந்தப் பிரிவிலே அபராதத்தைப் பற்றித்தான் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது ரிஜிஸ்டர் சொய்யாவிட் டால் கணக்குக் கொடுக்காவிட்டால் அரசாங்கத்தாரால் அபராதம் விதிக்கப் படும். கிரிமினல் குற்றப்படி வரியைக் கொடுக்காமல் ஏமாற்றுவதற்கு ஏதா வது காரியங்கள் செய்தால் அல்லது தடை செய்தால் அப்பொழுதுதான் இம்பிரிசன்மெண்ட் செய்யப்படுகிறது. இரண்டாவது தடை செய்தால் இம்பி

[Sri R. Venkataraman] [13th February 1959

பிரிசன்மெண்ட் கொடுக்கூடாது என்று சொல்லுவது அவ்வளவு நன்றாக இல்லை. அபராதம் போட்டுக்கொண்டே போனால் அவர்கள் 10,000 ரூபாய்கூட கட்டத்தயாராய் இருப்பார்கள். சுலபமாக கட்டிவிட்டுப் போய்விடுவார்கள். இன்னும் அதிகாரிகளுக்கு இன்னின்ன அதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன என்று சர்டிபிகேட் கொடுக்கவேண்டுமென்று சொன்னார்கள். இந்த விதிகள் பரிசீலனை செய்யப்படும் என்று சொல்ல விரும்புகிறேன்.

The amendments were put and lost.

Clause 45 was put and carried.

*Clause* 46.

MR. SPEAKER: The motion is—

"That clause 46 do stand part of the Bill."

SRI M. JAGANNATHAN: Sir, I move—

'In the clause, *omit* the words "or is reasonably suspected of having committed ".'

The amendment was duly seconded.

MR. SPEAKER: The clause and the amendment are before the House for discussion.

SRI M. JAGANNATHAN: Sir, my amendment says, in the clause, *omit* the words "or is reasonably suspected of having committed ". Sir, I think that the arguments that I have advanced for my previous amendment holds good for this amendment also. Clause 46 says:

"The prescribed authority may accept from any person who has committed or is reasonably suspected of having committed an offence against this Act, by way of composition of such offence, etc., etc."

Here I object to the expression "is reasonably suspected of having committed an offence ". We cannot proceed merely on the basis of the reasonable suspicion of an offence having been committed. That will give an undue advantage to the assessing authorities concerned, and it will work as an engine of oppression. Certainly, the poor business community will find it to their great disadvantage and they will be at the sweet will and pleasure, in fact at the mercy of these assessing authorities who for their own private reasons, if they happen to have some private feelings of ill-will or personal rancour or grudge, as I have already put it, might haul these persons before Courts of Law for no fault of their own. In order to safeguard against this, I appeal to the Hon. Minister to come forward to accept my amendment.

THE HON. SRI R. VENKATARAMAN: அது அஸ்திவாரம் இல்லாமல் கட்டப்பட்ட கோபுரம்போல் ஆகும். ஒரு அஸ்ஸஸி தவறு செய்திருந்தாலும், தவறு செய்ததாக சந்தேகப்பட்டாலும் அவர்கள் இஷ்டப்பட்டால் காம்பவுண்ட் செய்யவேண்டுமென்று இல்லை. அதற்காக அவர் ஏரோப்ளேனில் ஏறிப்போய் 11-40 a.m. விடப்போவதில்லை. ஆகவே, இந்தத் திருத்தம் அவசியம் இல்லை என்று

13th February 1959] [Sri R. Venkataraman]

சொல்வதற்குக் காரணம் என்னவென்றால், இதில் இருக்கக்கூடிய ஒரு சலுகையானது வியாபாரிக்கு ஒரு சாதகமான சலுகை. அவர் இஷ்டப் பட்டால் இதைக் கம்பவுண்ட் செய்துக் கொள்ளலாம். தவறு செய்து விட்டார் என்று நிரூபிப்பதற்குக்கூட அவசியம் இல்லாமல் "ரீசனபிள் சஸ்பிஷன்" என்று கொடுக்கப்பட்டிருக்கிறது. எனவே திரு. ஜகநாதன் அவர்கள் அவருடைய திருத்தத்தை வாபஸ் பெறுவார்கள் என்று நம்புகிறேன். 11-40 a.m.

MR. SPEAKER : Is the hon. Member withdrawing his amendment? I was wondering whether he was going to withdraw it in view of the reply given by the Hon. Minister.

SRI M. JAGANNATHAN : I am pressing it, Sir.

The amendment was put and lost.

The clause was put and carried.

Clause 47 was put and carried.

*Clause* 48.

MR. SPEAKER : The motion is—

"That clause 48 do stand part of the Bill."

SRI N. K. PALANISAMI : Mr. Speaker, Sir, I move--

In sub-clause 1, *omit* the words ' or other proceeding '.

In sub-cause 2, *omit* the words ' or other proceeding whether under this Act or otherwise '.

The amendments were duly seconded.

MR. SPEAKER : The clause and the amendments are before the House for discussion.

SRI N. K. PALANISAMI : கனம் சபாநாயகர் அவர்களே, இங்கே "or other proceedings" என்று இருக்கிறது. இது எதற்காக என்று தெரிய வில்லை. "other proceedings" என்றால் எங்கும் "question" பண்ண முடியாது. மேலும் அப்பீல் என்பதும் ப்ரோசீடிங்ஸ்தான். அங்கும் "question" பண்ண முடியாது. அப்படி எடுத்துக்கொள்ள வேண்டு மென்பது "They are not Caesar's wife to be above suspicion". ஆகவே இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே இந்த ஷரத்தினுடைய கருத்து என்னவென்று சொன்னால், இந்தச் சட்டத்தில் உள்ளபடி இருக்கக்கூடிய அப்பீல் முறைகள் எல்லாவற்றை யும் கையாளவேண்டுமென்பதே தவிர வேறு ப்ரோசீடிங்ஸ் எடுக்கக் கூடாது. இந்த வரி விதிப்பு தவறு என்று சொன்னால் கோர்ட்டில் சூட் போடக்கூடாது. இதில் என்ன அப்பீல் இருக்கிறதோ அதற்கு மேல் அப்பீல் போகவேண்டுமென்று என்பதெல்லாம் பற்றி ஒரு முடிவான "அஸெஸ்மெண்ட்" செய்து விட்டால் மறுபடியும் அதை வேறு கோர்ட்டு களுக்கு வேறு "ப்ரொசீடிங்ஸ்" நடக்கும்போது கிரிமினல் கோர்ட்டில் ப்ரொசீடிங்ஸ் எடுத்தாலும் சரி, அல்லது பார்ட்டி பணம் வசூல்செய்து ப்ரொசீடிங்ஸ் எடுத்தாலும் சரி, அந்த இடங்களில் மறுபடியும் இதை விவாதிக்க கூடிய முடிவு விஷயம் முடிவாக இருக்க வேண்டுமென்பதற்

காகத்தான் இந்த ஷரத்து போடப்பட்டிருக்கிறது. இதற்கும் "**Caeser's wife**"க்கும் சம்பந்தம் இல்லை. இதை ஏற்றுக்கொள்ளும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

The amendments were put and lost.

The clause was put and carried.

*Clause* 49.

MR. SPEAKER : The motion is—

"That clause 49 do stand part of the Bill".

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Mr. Speaker, Sir, I would like to know whether the Government are justified in introducing this clause, viz., clause 49 at all in this Bill. Even though the officers might have acted with bona fide intentions, there might be some grave irregularities and some officers might do some things with mala fide intentions. It should be possible for the affected parties to go to the court. So I would request the Government to see that this clause is deleted.

*SRI M. P. SUBRAMANIAM : சார், 49-வது பிரிவில் கண்டுள்ள படி ஒரு அதிகாரியின் மீது நடவடிக்கை எடுக்க வேண்டுமென்றால் அரசாங்கத்தின் முன் உத்தரவு இருக்கவேண்டுமென்று இருக்கிறது. இரண்டாவது பிரிவில் ஒரு அதிகாரி நல்ல எண்ணத்தோடு எடுத்தால் குற்றமாகக் கருதப்படக்கூடாது என்று இருக்கிறது. இது பொது விதியாதலால் இந்தச் சட்டத்திலே இடம் பெற வேண்டுமா என்று கேட்க விரும்புகிறேன். ஆகவே அரசாங்கத்தின் முன் அனுமதி பெறவேண்டும் என்ற விதி இந்தச் சட்டத்தில் இருக்க வேண்டுமா என்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ள விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, கனம் எம். பி. சுப்பிரமணியம் அவர்கள் சொன்னது உண்மைதான். அதாவது இப்பொழுது சட்டத்திலேயே இந்த விதமான ஒரு ஷரத்து இருக்கிறது. ஆனால் எல்லாச் சட்டங்களிலும் தனித்தனியாகப் போடுகின்ற இந்தவிதமான ஷரத்துக்கள் இருப்பதால் வழக்கத்தை precedent-ஐ ஒட்டி இதிலும் போடப்பட்டிருக்கிறது. இதில் எந்த விதமான கஷ்டமோ, தவறோ இல்லை என்பதை எடுத்துக்காட்ட விரும்புகிறேன். அதிகாரி தவறு செய்தால் சாங்ஷன் வாங்கிப் போட வேண்டும் என்பது எல்லோரும் ஒப்புக் கொள்ளக்கூடிய விஷயம்.

The clause was put and carried.

*Clause* 50.

MR. SPEAKER : The motion is—

"That clause 50 do stand part of the Bill."

SRI N. K. PALANISAMI : Mr. Speaker, Sir, I move—

"*For* the words, 'within six months', *substitute* the words 'within one year'."

The amendment was duly seconded.

13th February 1959]

SRI M. JAGANNATHAN : Sir, I move—

"At the end of the clause *add* the following proviso, namely :—

'Provided that the time taken to obtain the previous sanction of the Government referred to in section 49 shall be excluded from the said period.' "

The amendment was duly seconded.

MR. SPEAKER : The clause and the amendments are before the House for discussion.

SRI N. K. PALANISAMI : கனம் சபாநாயகர் அவர்களே, 6 மாதம் "டைம்" போதாது, ஒரு வருஷம் வேண்டும் என்பது என்னுடைய திருத்தம். கிட்டத்தட்ட "சிவில் ப்ரொசிஜர் கோடில்" இருக்கக்கூடிய வார்த்தை இதில் இருக்கிறது. நோட்டீஸ் கொடுப்பதற்கே இரண்டு மாத காலம் ஆகும். மேற்கொண்டு "கம்ப்ளெய்ண்ட்" சர்க்கார் மீது. அதற்குக் கொஞ்சம் "டைம்" ஆகுமாதலால் இதை 9 மாதம் அல்லது ஒரு வருஷம் என்று திருத்தவேண்டுமென்ற என்னுடைய திருத்தத்தை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

SRI M. JAGANNATHAN : Mr. Speaker, Sir, clause 50 deals with limitation for certain suits and prosecutions. The clause says :—

"No suit shall be instituted against the Government and no suit, prosecution or other proceeding shall be instituted against any officer or servant of the Government in respect of any act done or purporting to be done under this Act, unless the suit, prosecution or other proceeding is instituted within six months from the date of the act complained of."

If this clause is read with reference to clause 49 which also deals with bar on certain proceedings we come to the conclusion that unless the previous sanction of the Government is obtained no action could be instituted against the Government or the officers concerned. Therefore I suggest in my amendment that the six months period should not included the time taken by the Government to give the prior sanction. The period taken by the Government to accord sanction should be excluded. That is the effect of my amendment. I hope the Hon. Minister sees my point and will therefore accept my amendment.

* THE HON. SRI R. VENKATARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, I see the point. (Laughter.) I want the hon. Member also to see my point now. இப்பொழுது இருக்கக்கூடிய சட்டத்திலேயே 6 மாதம் என்றுதான் இருக்கிறது. ஆகவே இதை இன்னும் 1 வருஷம் என்று நீடிக்க வேண்டிய அவசியம் இல்லை. கனம் பழனிசாமி அவர்கள் அவருடைய திருத்தத்தை வாபஸ் பெறவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். ஸ்ரீ எம். ஜகந்நாதன் கூறியதை ஏற்றுக்கொண்டால் என்ன ஏற்படும் என்றால், ஒரு வருஷம் கழித்துகூட ஒரு அப்ளிகேஷன் போட்டு அதற்கு வேண்டிய நிருபணம் எதுவும் கொடுக்காமல் இருந்து, நீண்ட காலத்திற்குப் பின்பு முழுக்க கவனிக்கும்படியான நிலைமை ஏற்பட்டு விடும். இதற்கு 49–வது பிரிவிலும் ஒரு திருத்தம் செய்யவேண்டும். அவர்கள் அப்ளிகேஷன் இரண்டு மாதத்திற்குள்ளாக சாங்ஷன் ஆகவேண்டுமென்று போட வேண்டும். இன்னும் பல திருத்தங்களும் செய்யவேண்டி இருக்கும்.

